# சபாபதி — ஜமீந்தார்



★

நாடகப் பேராசிரியர்
ராவ் பஹதூர் ப. சம்பந்த முதலியார், பி.ஏ., பி.எல்.,
அவர்களால் இயற்றப்பட்டது

அவர் எழுதிய மற்ற நூல்கள்.

லீலாவதி—சுலோசனை, சாரங்கதரன், மகபதி, காதலர் கண்கள், நற்குல தெய்வம், மனோஹரன், ஊர்வசியின் சாபம், இடைச்சுவர் இருபுறமும், என்ன நேர்ந்திடினும், விஜயரங்கம், கள்வர் தலைவன், தாசிப்பெண், மெய்க்காதல், பொன் விலங்குகள், சிம்ஹளநாதன், விரும்பிய விதமே, சிறுத்தொண்டர், காலவரிஷி, ரஜபுத்ரவீரன், உண்மையான சகோதரன், சதி-சுலோசனா, புஷ்பவல்லி, கீதமஞ்சரி, உத்தமபத்தினி, அமலாதித்யன், சபாபதி முதற்பாகம், பொங்கல் பண்டிகை அல்லது சபாபதி இரண்டாம் பாகம், ஓர் ஒத்திகை அல்லது சபாபதி மூன்றாம் பாகம், சபாபதி நான்காம் பாகம், பேயல்ல பெண்மணியே, புத்த அவதாரம், விச்சுவின் மனைவி, வேதாள உலகம், மனைவியால் மீண்டவன், சந்திரஹரி, சுபத்திரார்ஜுனா, கொடையாளி கர்ணன், சஹதேவன் சூழ்ச்சி, நோக்கத்தின் குறிப்பு, இரண்டு ஆத்மாக்கள், சர்ஜன் ஜெனரல் விதித்த மருந்து, மாளவிகாக்னிமித்ரம், விபரீதமான முடிவு, சுல்தான்பேட்டை சப் அஸிஸ்டென்ட் மாஜிஸ்டிரேட், சகுந்தலை, காளப்பன் கள்ளத்தனம், விக்ரமோர்வசி, முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும், நாடகமேடை நினைவுகள்—முதற்பாகம், இரண்டாம் பாகம், மூன்றாம் பாகம், நான்காம் பாகம், ஐந்தாம் பாகம், ஆறாம் பாகம், நாடகத் தமிழ், யயாதி, பிராம்மணனும் சூத்திரனும், வாணீபுரவணிகன், இரண்டு நண்பர்கள், சத்ருஜித், ஹரிச்சந்திரன், மார்க்கண்டேயர், ரத்னாவளி, கண்டு பிடித்தல், கோனேரி அரசகுமாரன், சந்தையிற் கூட்டம், வைகுண்ட வைத்தியர், தீட்சிதர் கதைகள், ஹாஸ்யக் கதைகள், குறமகள், நல்லதங்காள், சிறுகதைகள், நடிப்புக்கலையில் தேர்ச்சி பெறுவதெப்படி ?, ஹாஸ்ய வியாசங்கள், தமிழ் பேசும் படக்காக்ஷி, விடுதிப்புஷ்பங்கள், பேசும்பட அனுபவங்கள், வள்ளி மணம், கதம்பம், மாண்டவர் மீண்டது, ஆஸ்தானபுரம் நாடகச் சபை, சங்கீதப் பயித்தியம், ஒன்பது குட்டி நாடகங்கள் முதலியன.

முதற் பதிப்பு

காபி ரைட்] 1945 [விலை அணா 12—0

INSCRIBED

TO

THE BELOVED MEMORY

OF

MY PARENTS

P. VIJIARANGA MUDALIAR

AND

P. MANICKAVELU AMMAL

AND

MY FRIEND

C. RANGAVADIVELU

# PREFACE

This story was originally written by me for a talkie. Some of my friends suggested that it might be used as a stage play also. So, I have printed it with some suitable alterations.

Persons staging this play or any other from my pen must obtain my previous permisssion and pay a Royalty beforehand.

17th May '45.
'PAMMEL LODGE'
George Town, Madras.

P. SAMBANDAM.

# சபாபதி ஜமீந்தார்

## நாடக பாத்திரங்கள்

சபாபதி முதலியார்

சபாபதி — வேலையாள்

கிருஷ்ணசாமி முதலியார்

கன்னி — சபாபதியின் மனைவி

குருக்கள், புரோஹிதர், வாத்தியக்காரர்கள், வேலையாட்கள், பல மாறுவேடங்கள் பூண்ட கிராமவாசிகள்.

# சபாபதி ஜமீந்தார்



## முதல் அங்கம்

### முதல் காட்சி

இடம் — சபாபதி முதலியார் பங்களாவில் ஓர் அறை.

காலம் — காலை.

*சபாபதி முதலியாரும், கிருஷ்ணசாமி முதலியாரும் பேசிக்கொண்டு வருகின்றனர்.*

கி. என்னு அத்தான், இந்த வருஷம் ஹோளி பண்டிகைக்கு நம்போ என்னமானும் புதுசா வெளெயாட்டு யுக்தி பண்ணணும், என்னமானலும் புதுசா யுக்தி சொல்லுங்க பார்க்கலாம்.

ச-மு. இதிலே யெல்லாம் நீதாம்பேன் கெட்டிக்காரன்! நீ சொல்லு நல்ல யுக்தியா, அப்படியே செய்யலாம்.

கி. எனக்கு ஒரு யோசனே தோணுது அத்தான்—நம்ப சபாபதி, நீங்க ரெண்டு பேரும் ஜமீந்தாருங்களா ஆயிபூட்டைங்களே—என்னெகூட ஒரு சின்ன ஜமீந்தாரா ஆக்கி விடுங்களேன், இண்ணு எப்பப் பார்த்தாலும் தொந்தரவு பண்ணிகினு இருக்கிறுன்—இந்த வருஷம் ஹோளி பண்டிகையும் போது, சபாபதியே மதுரெ பக்கத்திலே நானு புதுசா வாங்கின கிராமத்துக்கு அழைச்சிகினு போயி, அந்த ஊருக்கு அவன் தான் ஜமீந்தார் இண்ணு சொல்லி பத்து நாளைக்கு வேடிக்கை பண்ணலாம்.

ச-மு. நல்ல வேடிக்கையா யிருக்கும், அப்படியே செய்யலாம்.

## இரண்டாம் காட்சி

இடம் — சபாபதியின் அறை.

கன்னி அரிசி குத்திக் கொண்டிருக்கிருள்.

சபாபதி ஒரு கடிதத்தைக் கையிலேந்திக் கொண்டு விரைந்து வருகிருன்.

ச. கன்னி!—அந்த ஒலக்கையெ வீசிக் கடாய்ச்சு மூலெ யிலே! இனிமேலே நீ ஒண்ணும் வேலெ செய்யவே கூடாது!

க. டேப்பா! என்ன வாழ்வு வந்துது?—நாலு ரூபாயிலே நல்ல சேலெக்கி வழியே காணும்! நானு எத்தனி நாளா கேட்டுகினு வர்ரேன்.

ச. சத்! பிகாரி!—நாலு ரூபாய் சேலெயாவது!—இனி மேலே, நீ வூட்லேகூட நாப்பது ரூபா பொடவெதான் கட்டணும்! வெளியே போன நானூறு ரூபா சரிகெ சேலே!

க. டேயப்பா!—உனக்கென்ன பயித்தியம் கியத்தியம் ஏதாவது புடிச்சி போச்சா என்ன?

ச. தா! கன்னி!—இப்படி யெல்லாம் அவமரியாதியா பேசாதே! என்னெ யாரிண்ணு பாத்துகினே?

க. எங் கண்ணென்ன கெட்டா போச்சு? எம் புருஷ னெ எனக்குத் தெரியாதோ?

ச. அது ஒரு பக்கம் இருக்கட்டும்—வர்ர வாரம் மொதலு நானு—ஜமீந்தார்!

க. என்னது!

ச. ஜா—மிந்—தார்!

க. ஜாமீந்தாரா!—யாருக்கு ஜாமீன் கொடுக்கப் போரே?

ச. சத்! அதனப்பிரசங்கி!—மூடு வாயெ!—ஜமீந்தார்!

க. அம்மாடி!—ஜமீந்தார் மூஞ்சியெ பாரு!—அதிருக் கட்டும்—என்ன சமாசாரம்?

ச. இந்த காயிதத்தெ கொஞ்சம் படிச்சிப் பாருடி!—(காகிதத்தை அவள் கையில் கொடுத்து) நம்ப மச்சா மொதலி யாரு ரொம்ப நல்லவரு! ரொம்பநாளா நானு என்னெ கூட ஒரு சின்ன ஜமீந்தாரா ஆக்கி விடுங்களேன் இண்ணு கேட்டுகினு இருந்தேன், அவுங்க ஜமீனுக்கு

பக்கத்து ஊருக்கு என்னெ ஜமீந்தாரா ஏற்பாடு பண்ணி உட்டாரு!

க. (காகிதத்தைத் திருப்பிக் கொடுத்து) எனக்கென்னமோ சந்தேகமா யிருக்குது! மச்சா மொதலியாரு எப்பவும் குறும்புகாறு—நம்ப எஜமானும் அவருமா சேந்து என்னமானலும் வேடிக்கெ பண்ராங்களோ என்னமோ?

ச. வேடிக்கையாவது! நம்பொ எஜமானெ மொள்ள கேட்டேன், அவரு, நீ ஒண்ணும் பயப்படாதே—நானு உன்னெ இட்டும் போயி ஜமீந்தார் பட்டம் கட்டி வைக்கிறேன், இண்ணு சத்தியம் பண்ணிக் கொடுத்தாரு!

க. அவர் சொன்ன கொஞ்சம் நம்பலாம்! ஆனலும் அது என்ன ஊரு அது? காயிதத்திலே சரியா பேரு தெரியலே.

ச. துறப்பாக்கம்!—துறப்பாக்கம்! ஜமீந்தார்! துறப்பாக்கத்து ஜமீந்தார் ஆவப்போறேன்!

க. ஒருவேளே, தொறப்பாக்கத்து முண்டமாகப் போறையோ என்னமோ! நீ கேட்டதில்லையா, தொறப்பாக்கத்து முண்டம் இண்ணு சொல்ராங்களே!

ச. ஆமாண்டி! எனக்கு கூடம் இப்ப ஞாபகம் வருது!—அவுங்ககிட்ட போயி அந்த ஊர் பேரே மாத்திவுடச் சொல்ரேன். (வேகமாய் வெளியே போகிருன்.)

---

## மூன்றும் காட்சி

---

இடம் — சபாபதி முதலியார் வீட்டில் ஓர் அறை.

காலம் — பகல்.

கிருஷ்ணசாமி முதலியாரும், சபாபதி முதலியாரும் பேசிக் கொண்டு வருகின்றனர்.

கி. நானு இண்ணைக்கி சாயங்காலமே புறப்பட்டு போயி அங்கே ஏற்பாடெல்லாம் பண்ணி வைக்கிறேன். நீங்க அவனை திங்கட்கிழமெ காலமே அனுப்பி விடுங்கள்.

ச-மு. ஏம்பேன்? நானும் உன்னேடே வர்ரேனே! நான் மாத்திரம் இந்த வேடிக்கை யெல்லாம் பார்க்கத் தேவலையோ?

கி. நீங்க என்னமா அத்தான் என்னேடே வர்ரது? நானு அந்த ஊரு நாட்டாமைக்காரன் இண்ணு வேஷம் போட்டுக்கப் போரேன்-வேடிக்கை யெல்லாம் பண்ண —நீங்களும் என்னேடே வந்தால், உங்களெ எப்படியும் அவன் கண்டு பிடிச்சி விடுவானே!

ச-மு. அதெல்லாம் ஒதவாது—நானும் வருவேன்—

(சபாபதி விரைந்து வருகிறுன்.)

ச. அப்பா! என் பெண்சாதி—உத்தரவு கொடுத்தூட்டாப்பா—நானு ஜமீந்தா ராயி போவ!—ஆனு அந்த ஊரு பேரே மாத்திரம் மாத்தி உடணும் இண்ரா—தொறப்பாக்கம்—நண்ணு யில்லேயாம்—தொரப்பாக்கம்—என்னமோ இண்ணு சொல்ராங்களாமே.

கி. அடே! என்ன பயித்தியக்காரனு இருக்கரே! அந்த ஊரும் பேரு துடப்பம்பாக்கம்!—அந்த ஊர்லெ தொடப்பங்கள் நண்ணுவிளேயுதுண்ணு. துடப்பம்பாக்கம் இண்ணு நண்ணுயில்லே இண்ணு சொல்லி—நானு தொறப்பாக்கம் இண்ணு மாத்தனேன்—தொடப்பம்பாக்கம் ஜமீந்தாரிண்ணு நண்ணுயிருக்குமா?

ச. ஊம்—தொடப்பக்கட்டெ ஜமீந்தாரிண்ணு நல்லா யில்லே —தொறப்பாக்கமே யிருக்கட்டும்— எப்ப—நானு பொறப்படரது?

கி. திங்கட்கிழமை காலமே அங்கே போவ புறப்படு. அந்த ஊரு நாட்டாமெ காரனுக்கு உன்னெ மரியாதை யோடே ஊர்கோலமாக வரவழைக்கிறத்துக்கு, எல்லா ஏற்பாடும் செய்யச் சொல்லி எழுதி யிருக்கிறேன்.

ச. நீங்க வரமாட்டைங்கோ என்னேடே?

கி. நானு வரத்துக்கு இல்லெ அப்பா—நானு காசிவரைக்கும் யாத்திரே போக வேண்டி யிருக்குது.

ச. அப்பொ—அப்பா—நீயாவதுகூட வரணும்—இல்லாப் போனு நானு போவ மாட்டேன். அந்த ஊரு ஜமீந்தாரானு, எப்படி எப்படி நடத்துகிறது இண்ணு எனக்கு தெரியாதே! யாரு அதெல்லாம் எனக்கு சொல்லிக் கொடுக்கிறது?

ச.மு. அப்பேன் அவன் சொல்ரதும் ஒரு விதத்திலே நியாயம் தான். அந்த ஊர்லே யாருக்கும் என்னெ தெரி

யாது—நானு ஜமீந்தாருடைய காரியஸ்தன் இண்ணு சொல்லி கூட போரேன்.

கி. ஆம்! அதான் சரி அத்தான். அந்த ஊர்லே முன்னே யிருந்த ஜமீந்தாருக்கு ராஜா பட்டம்கூட இருந்தது. அத்தொட்டு நீங்க ஜமீந்தாருக்கு திவாஞ வந்தூடுங்க.

ச-மு. சந்தோஷம்.

ச. ரொம்ப சந்தோஷம்—நானு ஜமீந்தாரு! நீ திவாஞ!

கி. அடடே! திவாஞ அல்லா, திவான்! திவான்!— திவாஞ இண்ணு வேறே அர்த்தமாகும்.

---

# இரண்டாம் அங்கம்

---

## முதல் காட்சி

இடம் — துறப்பாக்கத்தில் ஓர் பெரிய வீட்டில் அறை.

சபாபதி உள்ளே உலாவிக் கொண்டிருக்கிறுன்.

கிருஷ்ணசாமி முதலியார் ஊர் நாட்டாமைக்காரஞக மாறு வேடம் பூண்டு ஒரு வெள்ளித் தட்டில் சரிகை உடுப்பு முதலியவைகளே யெல்லாம் கொண்டு வருகிருர்.

ச. யார் அது?

கி. (மாறு குரலுடன்) ராஜா அவாளுக்கு—

ச. யார் அது ராஜா?

கி. மன்னிக்க வேண்டும்—இந்தஊர்ஜமீந்தாரை நாங்கள் எல்லாம் ராஜா என்று தான் மரியாதையாக அழைப் பது வழக்கம்—ஏழைகளாகிய எங்களுக்கு நீங்கள் தானே ராஜா?

ச. சந்தோஷம்—என்ன சமாசாரம்?

கி. ராஜா அவாள் பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய உடுப் புகளெல்லாம் கொண்டு வந்திருக்கிறேன்—அதை தயவு செய்து அணிந்து கொள்ள வேண்டும்.

ச. நீங்கள்—நீ—யார்?

கி. நான் நாட்டாமைக்காரன்.

ச. அப்படிண்ணு—இந்த ஊர்லே இருக்கிர ஆமைகளுக் கெல்லாம் ஏட்?

கி. இந்த ஊருக்கு—ராஜா அவர்கள் கீழ்—நான் தலைவன்; அவருக்கு செய்ய வேண்டிய வேலைகளை யெல்லாம் செய்பவன்—ஒரு மந்திரி மாதிரி.

ச. நான் ஒரு திவாஞ—வை—அழைத்துக்கொண்டு வந்திருக்கிறேன். அவர்தான் என் மந்திரியா யிருக்கவேண்டும்.

கி. சமஸ்தானத்தின் உத்தரவுபடி—அவர் யார்?

ச. என்னோடே வந்தாரே—சபாபதி முதலியார்—அவரை உடனே என்னிடம் அனுப்பு.

கி. சித்தம் (தட்டை அங்கு வைத்துவிட்டுப் போகிருர்.)

---

## இரண்டாவது காட்சி

இடம் — அவ்விடம் அறைக்கு வெளியே.

கிருஷ்ணசாமி, சபாபதி முதலியாரை சந்திக்கிருன்.

கி. அத்தான்—உங்களே கூப்பிடரான்—உடனே போகாதைங்க—கொஞ்சம் பொறுத்துப் போங்க—அந்த துணிமணிகளை யெல்லாம் எப்படி அலங்கோலமா போட்டுகிருனே பார்ப்போம்!

ச.மு. ஆசாமி, உன்னெ கண்டு பிடிச்சான?

கி. இல்லவே இல்லை!

---

## மூன்ரும் காட்சி

இடம் — முதல் காட்சியில் காட்டிய விடமே.

ச. இதென்னடா கஷ்டமா யிருக்குது! இதுங்களை யெல்லாம் எப்படி போட்டுகிறதிண்ணு தெரியலே—யாராவது பாக்கப் போராங்க! (கதவை சாத்திக் கொண்டு சபாபதி அந்த துணிமணிகளை யெல்லாம் போட்டுக் கொள்ளத் தெரியாமல் தாறுமாருய் போட்டுக் கொள்ளுகிருன்) அப்பா! அப்பா! (கதவைத் தட்டுகிருன்) அடடே! தப்பு! தப்பு!—திவாஞ! —திவாஞ!

ச.மு. (வெளியிலிருந்து குரல் கொடுக்கிருர்.) ஏன்?

(சபாபதி கதவை மெள்ளத் திறக்க சபாபதி முதலியார் உள்ளே நுழைகிருர். அவருடன் கிருஷ்ணசாமி முதலியாரும் நுழைகிருர்.)

ச. ஏய்! காட்டாமே! உன்னே யார் இங்கே வரச் சொன்னது!-போ வெளியே—நான் கூப்பிடாதிருக்கரப்பொ ஒருத்தரும் வரக்கூடாது.

கி. சித்தம்!—(திரும்பி சிரித்துக் கொண்டே போகிறார்.)

(சபாபதி உள்ளே கதவை தாளிட்டுக் கொள்கிறான்.)

ச.மு. ஏன் என்னெ கூப்பிட்டையே?

ச. மின்னெ அந்த ஜன்னலெ சாத்துங்க சொல்ரேன்— (சபாபதி முதலியார் அப்படியே செய்கிறார்.) இது யாரப்பா? நாட்டாமையோ, காட்டாமையோ? அவனே பாத்தா எங்கையோ பாத்த மூஞ்சியா யிருக்குது?—நம்ப மச்சா முதலியாரு ஜாடையா இல்லெ—கொரலும் அப்படியே யிருக்குது—

ச.மு. சீச்சீ! அதெல்லாம் தப்பு!—கிருஷ்ணசாமி—காசி யாத்திரைக்கு பொரப்பட் டிருகிறானே!—அவன் எங்கே இங்கே வந்தான்? அவன் சித்தப்பா புள்ளே, இந்த நாட்டாமைக்காரு இண்ணு சொன்னன், அதான் அந்த ஜாடெ கொஞ்சம் இருக்குது, இந்த ஊர்லெ ஜமீந்தாருக்கு அப்புறம்—உனக்கப்புறம்—அவர் தான் ரொம்ப பெரிய மனுஷர்—அவரெ அடே கிடெ இண்ணு பேசாதே-கொஞ்சம் மரியாதை யாக பேசு.

ச. ஆவட்டும்—இதென்னப்பா—இந்த உடுப்பெல்லாம் போட்டுக எனக்கு தெரியலெயே—இதென்னென்னமோ இருக்குது. பொம்மனாட்டிங்க உடுப்பாட்டங்கூட இருக்குதே!—இதையெல்லாம் எப்படி போட்டுகிறது?

ச.மு. எனக்குக்கூட தெரியாது—இது இந்த ஊர் ஜமீந்தார் உடுப்பாம், நானு அந்த நாட்டாமைக்காரெ கூப்பிட்டு—உனக்கு போடச் சொல்ரேன்.

ச. செய்யப்பா— (சபாபதி முதலியார் கதவை திறந்துக்கொண்டு போய் கிருஷ்ணசாமியை அழைத்துக் கொண்டு வருகிறார்.) நீங்க என்னத்துக்கு கண்ணாடி போட்டுகினு இருக்கிரைங்களே?

கி. ராஜா அவாளுக்கல்லவா—கொஞ்சம் சாலேஸ்வரம்—அதற்காக.

ச. ராமேஸ்வரத்துக்கு போனா, சாலேஸ்வரம் தீர்ந்து பூடும் இண்ராங்களே. அதுக்கோசமோ?

## நான்காவது காட்சி

இடம் — ஜமீனில் கொலு மண்டபம்.

காலம் — பகல்.

ஜனங்கள் இருபுறமும் நின்று கொண்டிருக்கின்றனர். சபாபதி, சபாபதி முதலியாரும், (நாட்டாமைக்காரன் வேஷத்தில்) கிருஷ்ணசாமி முதலியாரும கைலாகு கொடுக்கக் கொலுவிற்கு வருகிறான். ஜனங்கள் மத்தியில் புரோகிதர் ஒருபுறமாக இருக்கிறார்.

க. (கட்டியக்காரன் வேடம்பூண்டு ஒருவன்) பராக்! பராக்!
ராஜாதி ராஜன்!
அதிவீர ராமன்—அலங்கோல தாமன்!
ராஜமார்த்தாண்டன்—ராஜகீரத்தன்டன்!
ராஜ கம்பீரன்—ராஜ சூகரன்?
அசாத்திய ராமகோடி சூரன்—அரைபடி அன்னம் மாளவைக்கும் தீரன்!
திருத்துறப்பாக்கத்து—திருமுண்டீஸ்வரன்!
வருகிறார்—பராக்! பராக்!

ச. என்ன ஐயா—என்னமோ கத்தரானே!—என்னெ திட்டரானா என்ன?

கி. அப்படி யொன்றுமில்லை. ராஜா அவர்களுடைய பிருதாவளி கூறுகிறான்—கட்டியகாரன்.

(ஒருபுறம் நாகஸ்வரம் வாசிக்க—மற்றொருபுறம் பாண்டு வாசிக்க சபாபதி சிம்மாசனத்தருகில் வருகிறான். உடனே சிம்மாசனத்தின் பேரில் ஏறப் போகிறான்.)

கி. இதற்குள்ளாக அல்ல—கொஞ்சம் இங்கே உட்கார வேண்டும்.

பு. மஹாப் பருப்பு!—சங்கல்பம் பண்ண வேண்டும்—மூக்கெ பிடிச்சுங்கள்.

ச. (அவன் மூக்கைப் பிடித்துக் கொள்ளுகிறான்.)

பு. ஆ! ஆ!—என் மூக்கையல்ல—உங்க மூக்கெ! உங்க மூக்கெ!

(சபாபதி அப்படியே செய்கிறான்.)

ச. ஐயா! ஐயா! மூச்சுவிட முடியலே சீக்கிரம் முடிச்சுடுங்க.

(புரோகிதர் தப்பும் தாறுமாருக—சங்கல்பம் சொல்லுகிறார்.)

பு. ராஜா அவாள் கோத்திரம் யென்னவொ?

ச. கோத்திரம் இன்னா?

கி. என்ன கோத்திரத்திலே பிறந்தீர்கள் என்று குறுக்கள் கேட்கிருர்.

ச. மூலகோத்ரம்.

பு. இடம் கேக்கலெ, என்ன ஜாதியிண்ணு கேட்டேன்.

ச. முதலியார் கோத்ரம்.

பு. (முதலியார் கோத்ரம் என்று சங்கல்பத்தை முடிக்கிருர்.)

ச. ஏன் அல்லாம் சிரிக்கிராங்களே ?

கி. சிரிப்பா அது! எல்லோரும் சந்தோஷப்படுகிருர்கள்.

பு. இனி—பட்டாபிஷேகத்திற்கு ஆரம்பிக்கலாமா ?

ச. ஓய்! காட்டாமெகாரரே! இந்த ஐயர் வேணும்—பட்டாபிஷேகம் வேறெ யாரையாவது செய்யச்சொல்லுங்க—அவர் பக்கத்திலே இருக்கிருரே அவரெ செய்யச் சொல்லுங்க.

பு. ராஜா அவர்களுக்கல்லவா—இவன் என் தம்பிதான்—ஆனாலும் கொஞ்சம் தத்துவாய்.

ச. சத்! நான் ஜமீந்தார்—ராஜா—நான் சொல்ரபடி நடக்கணும்.

பு. உங்கள் இஷ்டம்—தம்பி—நீ ஆரம்பிடா அப்பா.

பு.த. ராஜா—குட்டிங்க! வி—விக்னேஸ்வரர் -பூ—பூஜை ஆரம்பிக்கணும்.

ச. (உச்சந்தலையில் நன்ருய் இழுத்துக் குட்டுகிருன்.)

பு.த. என்—தலையிலே அல்லா! ஒங்க தலையிலே.

ச. என்ன பெரிய கஷ்டமா போச்சி! (தன் தலையில் கெட்டியாக குட்டிக் கொள்ளுகிருன்.)

பு.த. (தெத்திச் சொல்லுகிருன்.) சுக்கிலாம்பரதரம், விஷ்ணும், சசிவர்ணம், சதுர்புஜம், பிரசன்ன வதனம்தியாயேத், சகல விக்னோபசாந்தையே.

ச. ஏ! என்னெயென்ன நங்கு காட்டரைங்களா என்ன? நீங்க வாணும் போதும், அவரையே வரச்சொல்லுங்கள்.

பு. (தம்பியை எழுப்பிவிட்டு தான் உட்கார்ந்து) அறிவோம்—அகடவிகட புருஷே, வாத்தியார் பிராமண, ஆசியா கண்டே, கால் உடைந்த மாட்ராஸ்கல் ஷேத்ரே, கூவம் அண்ட் கெல்லிஸ் டிரெயின் சங்கமே, ஆனந்தவிகடன் பாராயணே, ஐகோட் தாழ்வாரே, துறப்பாக்கம் க்ஷேத்

திரியே, பிச்சாம்பாள் சமேதாபிட்சாடனர், சந்நிதௌ, எக்யோபவித சகலவிக்ன பிரதீட்சம், பட்டாபிஷேக சிராத்தம், கரிஷ்யேநம!—அத்திக்காயாமி, அவரக்கா யாமி, ஆசனமே இல்லையாமி, ஸ்நானார்த்தம் சல்பியூ ரிக் ஆசிட் (Sulphuric acid) கந்தார்த்தெ களிமண் சமர் ப்பயாமி, புஷ்பார்த்தெ சப்பாத்தி சமர்ப்பியாமி, வஸ் திரார்த்தெ கோணிப்பை சமர்ப்பயாமி, தீபார்த்தெ அவுட் அப் ஆர்டர் (order) எலிக்டிரிக்லைட் சமர்ப்ப யாமி, தட்சிணார்த்தெ அர்பத்நட் அவுஸ் ரொக்கம் முழுதும் சமர்ப்பயாமி, தூபார்த்தெ, பீடி, சிகரெட், அண்டு சிகார் (cigar) சமர்ப்பயாமி, நைவேத்யார்த்தெ கசப்பு பாவக்காய் சமர்ப்பயாமி—

ச. ஐயா! சீக்கிரம் முடிங்கய்யா!—எனக்கு பசியா யிருக்குது.

பு. இதோ ஆயிட்டுதுங்க!—கலச பூஜையாகி, பஞ்ச கவ் யம் சாப்பிட்டுவிட்டு, சிம்மாசனத்தில் ஏறவேண்டியது தான்.

ச. என்னமோ சாப்பிடரது இண்ணு சொன்னைங்களே அதெ முன்னெ வைச்சிக்கங்களேன்?

பு. அப்படி கூடாதுங்க.

ச. என்னது அது சாப்பிடரது?

பு. பஞ்சகவ்யம்.

ச. அப்படி யிண்ணா?

பு. பஞ்சகவ்யம் இண்ணா—பால், தயிர், நெய், கோமயம், கோஜலம்.

ச. ஆனா-சீக்கிரம் நடத்துங்க! (புரோகிதர் கலச பூஜை செய்து கொண்டிருக்கும்போது, கோஜல தொன்னையை எடுத்து மெல்ல ருசிபார்த்து) ஏ! ஐயா! என்ன பசுமூத்திரம் போலெ இருக்குதே.

பு. ஆமாங்க! இதுதான் கோஜலம், கோமயம் இன்னா சாணி.

ச. ஏன் ஐயா! என்னெ இத்தையா குடிக்கச்சொல் ரைங்க—நானு சொல்றபடி கேளுங்க—நானு பாலு, தயிர், நெய்யெக் குடிக்கிறேன். நீங்கள் இந்த இரண் டையும் சாப்பிட்டு விடுங்க! (பால், தயிர், நெய்யைச் சேர்த்து விடுகிறான்.)

பு. போதுங்க! போதும்! — இதோ கலச பூஜையை முடித்துவிட்டு நான் தருகிறேன் (அப்படியே செய்கிறார். பிறகு வாளுக்குப் பூஜை செய்து அதை உறையினின்றும் எடுக்கிறார். உடனே சபாபதி பயந்தோட, அவனை சபாபதி முதலியார் பிடித்திழுத்துக்கொண்டு வருகிறார்.)

ச. எனக்கு ஜமீந்தார் பட்டம் வாணும்பா! வாணும்பா!

ச.மு. (ஒருபுறமாக அவனிடம்) ஒன்றும் பயப்படாதே நானிருக்கிறேன்.

பு. இதைப் பிடித்துக்கொண்டு சிம்மாசனத்தை சுற்றி வாருங்கள். (வாளைக் கொடுக்கிறார்.)—இப்படியல்ல!— இப்படி. (சபாபதி அப்பிரதட்சிணமாக சுற்றிவரப் பார்க்க) இப்படியல்ல! இப்படி சுற்றிவரணும் (அப்படியே செய்கிறான்.)

ச. ஐயரே! சீக்கிரம் முடிச்சுடுங்கய்யா—பசிக்குது.

பு. இதோ ஆய்விட்டதுங்க!—இனி கிரீடம் சூட்டவேண்டியதுதான்—வாத்தியம்! வாத்தியம்! (வாத்தியங்கள் கோஷம் செய்ய, பின்புறமாக கொண்டுவந்து வைக்கோலால் செய்யப்பட்ட தலைகுட்டையில் துடப்பங்கள் சிர்பேஷ்துராயைப்போல் ஜோடிக்கப்பட்ட கிரீடத்தை சபாபதி தலையில் வைக்கிறார். ஜனங்கள் எல்லோரும் பெரும் நகைப்பாக நகைக்கிறார்கள்].

ச. ஏம்பா—மந்திரி!—சிரிக்கராங்களே ?

கி. மஹாராஜா! ஜனங்கள் எல்லாம் சந்தோஷத்தினாலே ஆரவாரம் செய்கின்றனர்.

ச. எல்லாம் ஆயிபோச்சோ யில்லையோ—சாப்பிடப் போகலாமா? ஏ! காட்டாமெகாரரே! இன்னம் என்ன ஆகணும்! சீக்கிரம் முடியுங்க, நானு சாப்பிடப் போவணும்.

கி. ராஜா அவாள், இவர்கள் எல்லோருக்கும் வெகுமானம் வழங்கவேண்டும்.

ச. அப்படி இண்ணா ?

கி. பரிசுகள் கொடுக்கணும்.

ச. என்கிட்ட என்ன இருக்குது ?

ச.மு. (காதருகில்) எல்லாம் நான் ஏற்பாடு செய்து வைத்திருக்கிறேன்—ஆவட்டும் இண்ணு சொல்லு

ச. ஆவட்டும்;

ச.மு. ஐயா பட்டாமணியம், நீங்க இந்த ஊர் வழக்கத்தின் படி யார் யாருக்கு வெகுமானம் கொடுக்கணும் சொல்லிகினுவாங்க—நான் மஹாராஜா கையில் கொடுத்துக்கொண்டு வருகிறேன். அவர் கொடுத்துக் கொண்டுவருவார்.

கி. முதலில் பட்டாபிஷேகம் செய்து வைத்த குருக்கள் ஐயாவுக்கு—ஜோடு சால்வை!

ச.மு. இதோ (இரண்டு சால்வைகள் வைத்துக் கொடுக்கிறார்)

ச. (அதை வாங்கிப்பார்த்து) என்னப்பா இது! சால்வெதான் இருக்குது!—ஜோட்டே காணோம்.

ச.மு. ஜோடுஇண்ணா—இரண்டுஇண்ணு அர்த்தம்.

ச. ஓ! சரிதான்—இந்தாங்கையா (ஐயரிடம் கொடுக்கிறான்.)

பு. மஹாபருப்பு! எங்கள் சித்தம் தங்கள் பாக்கியம்! தங்களுக்கென்ன கொரவா? (வாங்கிக்கொள்கிறார்)

கி. இதை பெரிய மேளத்திற்கு கொடுக்கவேணும் (ஒரு சரிக அங்கவஸ்திரத்தை கொடுக்கிறார்)

(மேளக்காரர் வந்து எதிரில் நிற்கின்றனர்.)

ச. பெரிய மேளக்காரன் இவன்தான் (சபாபதி அங்கவஸ்திரத்தை டவுல்காரனுக்கு கொடுக்கப்போகிறான்.)

ச.மு. இல்லே இல்லே! நன்றாய் ஊதினவனுக்கு கொடுக்கணும்.

ச. நண்ணா ஊதியிருக்கிறவன்—இவன்தான் (ஜாலர் போடுகிறவனுக்குக் கொடுக்கப் போகிறான்.)

ச.மு. இல்லே ராஜாவாள்!—வாத்தியம் வாசித்தவர்களுக்கு கொடுக்கணும்.

ச. ஆனால் இவனுக்குதான் கொடுக்கணும் (என்று சொல்லி துத்தி வாசித்தவன் கழுத்தில் அதைப் போடுகிறான்.)

ச.மு. ராஜாவாள்! இவன் வெறும் துத்தி ஊதியவன், இந்த இரண்டு நாகசரக்காரர்களில் எவனுக்காவது கொடுங்கள்.

ச. தப்பு! நானு கவனிச்சேனே! இவங்க ரெண்டுபேரும் உட்டு உட்டு வாசிச்சாங்க—இவன்தான் மூச்சுவிடாமெ வாசிச்சான்!—மந்திரி—எனக்கு ரொம்ப பசியாயிருக்குது மத்ததெல்லாம் அப்புறம் கொடுக்கிறேன் இண்ணு சொல்லுங்க.

ச.மு. சபையோர்களே, மிகுந்த பரிசுகளெல்லாம் சாயங்காலம் கச்சேரியில் கொடுக்கப்படும்.

கி. மஹாராஜா ஊர்கோலம் வரவேண்டியிருக்குது— பிறகு சாப்பாடுதான்.

ச. ஆனா அத்தெயும் சீக்கிரம் முடிச்சுடுங்க—பசிக்குது.

கி. ராஜா அவாள், ஒரு நிமிஷம் அப்படியேயிருக்கணும் அசையாமே! பட்டாபிஷேகக் கோலத்துடன் படம் பிடிக்க வேண்டியிருக்குது (படம் பிடிக்கிறார்கள்.)

கட். பராக்! பராக்! மஹாராஜா ஊர்கோலத்திற்கு புறப் படுகிறார்! (சபாபதி முதலியாரும், மாறுவேடம் பூண்ட கிருஷ்ண சாமி முதலியாரும், கைலாகு கொடுத்து சிம்மாசனத்தினின்றும் இறக்கி, வெளியே கொண்டுபோகின்றனர்.)

---

## ஐந்தாவது காட்சி

இடம் — ஜமீந்தார் வீட்டுவெளி முற்றம்.

வெளியில் துடப்பத்தால் அலங்சரிக்கப்பட்ட, ஆலவட்டங்கள், பிருதுகள் முதலியன சித்தமாயிருக்கின்றன, படியருகில் ஒரு கோவேறு கழுதை ஜேணத்துடன் நிற்கிறது. சபாபதி, சபாபதி முதலியாரும் கிருஷ்ண சாமி முதலியாரும் கைலாகு கொடுக்க வாசற்படி இறங்கி வருகிறான்.

ச. நானு என்ன, செய்யணும்?

கி. இதும்பேர்லே ஏறிகினு ஊர்கோலம் வரணும்.

ச. இது என்ன நம்ப ஊரு வண்ணமூட்டுக் கழுதையாட் டம் இருக்குதே?

கி. ராஜாவாள் அப்படி சொல்லக்கூடாது; இது ராஜாக் கள் ஏறும்படியான ஜந்து; இதற்குப் பெயரும் அப் படியே சுவாமி வைத்திருக்கிறார்—தயவு செய்து ஏறி உட்காருங்கள் (இரண்டு பேருமாக அவனை உட்காரவைக்கும் போது கழுதை திரும்பிக்கொள்ள சபாபதி அதன் வால் பக்கம் உட்காருகிறான்.)

ச. இதென்னப்பா! இந்த பக்கம் வாலிருக்குதே!

கி. ராஜாவாள் இந்த குதிரை பின்பக்கம் போகிற வழக் கம் (கழுதையை பின்னால் நடத்திக்கொண்டுவர சபாபதி ஊர்கோலம் வருகிறான். ஊர்கோலம் வரும்போது ஜரிடம் வெடில் போட

கழுதை பயந்து ஓட சபாபதி அதன் வாலைப் பிடித்துக் கொள்ளுகிருன் கொஞ்ச தூரம் போனபின் வாலை விட்டுவிட்டு மூர்ச்சையாகி விழுகிருன்! அச்சமயம் அருகிலிருந்த ஒரு பசு அவன் தலையிலிருந்த வைக்கோல் கிரீடத்தை புசிக்கிறது. கொஞ்சம் பொறுத்து மூர்ச்சை தெளிந்து எழுந்து அதைப் பார்க்கிருன்.)

ச. இதுதானு கிரீடம்!—அப்பவே அவசொன்ன—இந்த ஜமீந்தார் வேலையே வாணும்ணு!

சபாபதி முதலியாரும் கிருஷ்ணசாமி முதலியாரும் ஓடிவந்து சபாபதியை எழுப்பி உட்கார வைக்கிருர்கள்.

கி. ராஜா அவாளுக்கு ஒன்றும் அடிபடவில்லையே?

ச. அடிபடலே!—கிரீடம்தான் பூட்டுது!

கி. எங்கே போய்விட்டது?

ச. பசுவும் வயித்திலே! பசு திண்ணுவுட்டது அத்தே!

---

## ஆருவது காட்சி

இடம்—அரண்மனையில் ஸ்நான அறை.

காலம் — பகல்.

நாட்டாமைக்காரர் (கிருஷ்ணசாமி முதலியார்) சபாபதியை அழைத்துக்கொண்டு வருகிருர், சபாபதி முதலியார் பின்னல் வருகிருர்.

கி. ராஜா அவாள், இதுதான் தாங்கள் குளிக்க ஏற்படுத்தியிருக்கும் விடுதி இதோ பாருங்கள் இந்த குழாவைத் திருப்பினல் வென்னீர் வரும் (அப்படியே செய்கிருர். இந்தக் குழாவைத் திருப்பினல் குளிர்ந்தஜலம் வரும் (அப்படியே செய்கிருர்.)

ச. இந்தக் குழாயைத் திருப்பினல்? (என்று shower bath குழாயைத் திருப்புகிருன் உடனே அவன் தலைமேல் தண்ணீர் குபீரென shower bath விழுகிறது.)

ச.மு. அடடே! ராஜாவாள்! இதெல்லாம் என்னைக் கேட்காமல் ஒன்றையும் திருப்பாதிங்க.

---

## ஏழாம் காட்சி

இடம் — அரண்மனையில் சாப்பிடும் விடுதி—ஒரு பெரிய மேஜையின்பேரில் பெரிய இலை போட்டிருக்கிறது—அதன் மத்தியில் சபாபதி உட்காந்திருக்கிருன்—வைத்தி

வேடம் பூண்ட ஒருவன் ஒரு பக்கம் நிற்கிறன். சபாபதி முதலியார் அவன் பக்கம் போய் உட்காரப் பார்க்கிறார், கிருஷ்ணசாமி முதலியார் அவரைத் தடுக்கிறார்.

கி. மந்திரி, நீங்க மஹாராஜா பக்கத்தில் உட்காரக்கூடாது —இந்த பக்கம் உட்காருங்க—இதுதான் ஜமீன் மரியாதை (சபாபதி முதலியார் அப்படியே செய்கிறார்.)

ச. ஏ! ஐயா! காட்டாமேகாரு! சாப்பாடு எப்பவரும்?

கி. இதோ வந்துட்டுது!—யார் அங்கே? (போஜனசாலை அதிகாரி ஒருவன் வருகிறன்.)

ராஜாவுக்கு இன்றையதினம் போஜன விஷயங்களெல்லாம் தெரிவியுங்கள்!

வ. முதலில் ராஜாவால், இதைக் கொஞ்சம் முன்பு சாப்பிடவேண்டும்.

ச. நீங்க யாரு?—என்ன ஐயா இது?

வ. நான் அரண்மனை வயித்தியன்—இது நல்ல மருந்து.

ச. ஏய்? நான் விருந்து சாப்பிடப் போரேன்—இப்பொ மருந்தென்னத்துக்கையா?

வ. "விருந்தேயாயினும் மருந்தோடுண்" என்று சொல்லியிருக்கிறது. (சுக்கு லேகியம் கொடுக்கிறார்.)

ச. என்ன ஐயா கசக்குதே?

வ. அப்படித்தானிருக்குங்க.

ஒருவன். ராஜாவாள்! அவர்கள் சமூகத்திற்கு தெரிவிப்பது —இன்றையதினம்!—

உருளைக்கிழங்கு கோளா போட்ட ரவாகிச்சடி!

கருணைக்கிழங்கு வறுத்துப்போட்டத் தயிர்பச்சடி!

ச. பலே! பேஷ்! சீக்கிரம் கொண்டாரச் சொல்லுங்கள்.

ஒ. கொஞ்சம் பொறுக்கணும்—அப்புறம்.

அசல் பாதம் அல்வா, பால்கோவா, தூத்பேடா.

காததூரம் மணம் வீசும் கரம் போகடா.

ச. பலெ! பலெ! ரொம்ப சந்தோஷம்—கொண்டாரச் சொல்லுங்கள் ஐயா சீக்கிரம்.

ஒ. இன்னும் படிக்க வேண்டியது ரொம்ப இருக்குதுங்களே,—

ச. ஐயா, நானு சொல்றபடி கேளுங்க—இப்ப சொன்ன வரைக்கும் கொண்டாரச் சொல்லுங்க, அதுங்களே நானு சாப்பிட்டுகினு இருக்கிறேன் — இதுக்குள்ள மத்ததெ படிச்சிகினு வாங்க.

ஒ. இல்லெங்க, படிச்சி முடிக்கணும் முன்னே—ஜமீன் வழக்கப் பிரகாரம்.

ச. ஆனா பாட்டுகீட்டு, கதெயெல்லாம் உட்டுட்டு—சுருக்கிச் சொல்லி முடிங்க மத்ததையெல்லாம்.

ஒ. உத்தரவுபடி—ஜிலாபி, சோமாசு, பாதுஷா, ஜாங்கிரி, பதர்பேணி, சுருமாலாடு, பன்னீர் பூந்தி, காராபூந்தி, ஓமப்பொடி, பர்பி—

ச. ஐயா! போதும் போதும்! இவ்வளவையும் திண்ணா என் உடம்பு கெட்டுபூடும்—

ஒ. அப்படிதான் வயித்தியர் சொன்னாரு—இதுங்களெயெல்லாம் ராஜாவாள் இன்றைக்கு சாப்பிட்டா, அவர் உடம்பு கெட்டுபூடும், அத்தொட்டு, இதுங்களெயெல்லாம் பண்ணத்தேவலெ இண்ணு சொன்னாரு!

ச. ஏன் ஐயா! இண்ணெக்கி பண்ணத்தையா நானு கேட்டேன்? இண்ணெக்கி பண்ணத்தெ கொண்டாரச் சொல்லுங்க சீக்கிரம்.

ஒ. அப்படியே (உள்ளே போய் ஒரு தட்டைக் கொண்டு வருகிறான்.)

கி. என்னாப்பா அது?

ஒ. கடலெ பருப்பு துவையல்.

வை. (ஒரு புஸ்தகத்தினின்றும் படிப்பது போல்.)

"கடலெயைத் தின்னாதே,குடலெயது வலிப்பிக்கும் முடமதாயாக்கும் உன்னை மூர்க்கனே கேளாய் நீயே!" என்று சொல்லியிருக்குது எடுத்துக் கொண்டு போ! (சபாபதி விழிக்க ஒருவன் அதை எடுத்துக் கொண்டு போகிறான்.)

ச. ஏய்!—நீயாரையா அது?

கி. இவர் அரண்மனை வயித்தியர், அவர் சொல்லுகிறபடி தான் ராஜாவாள் சாப்பிடணும். (மற்றொருவன் ஒரு தட்டைக் கொண்டு வருகிறான்.)

கி. என்னாப்பா அது?

ம. கத்தரிக்காய் பொரியல்.

வ. சீ சி! (படிப்பதுபோல்)

கத்தரிக்காயதைப்போல் இத்தலத்தில் கெட்டதில்லை
　பத்திரமாய் நீக்கதனை, பாரதனில்! நீதானே!—
　கொண்டுபோ.

(வேலையாள் அப்படியே செய்கிறான்)

மற்றொருவன் ஒரு தட்டைக் கொண்டுவருகிறான்.

ச. என்னப்பா அது?

ம. உருளைக்கிழங்கு புட்டு.

ச. ஆ! கொண்டா இப்படி சீக்கிரம்— அது எனக்கு ரொம்ப இஷ்டம்!

வ. ராஜாவாள் பொறுக்கணும் (படிப்பதுபோல)

உருளைக்கிழங்கதனை, உண்ணாதே ஒருகாலும்
　கருணையின்றிப் புசித்தையோ காலுனக்கு
　முடங்கிப்போம்—உதாவது கொண்டுபோ—(அப்படியே வேலையாள் செய்கிறான்.)

ச. என்ன ஐயா! காட்டாமக்காரே! இப்படி அல்லாத்தையும் கூடாதிண்ணா நான் என்னத்தெ தான் சாப்பிடரது? எனக்கு பசிக்குது—வெறும் சாதமாவது கொண்டுவரச் சொல்லுங்க.

கி. அப்படியே! யாரடா அங்கே, வெறும் சாதம் கொண்டுவா.

உள்ளிருந்து ஒருவன் ஒரு வெள்ளித் தட்டில் சாதம் கொண்டு வருகிறான்.

வ. என்ன அரிசி சாதம் அப்பா?

ஒ. புழுங்கலரிசி.

வ. சீ சீ! (படிப்பதுபோல்)

புழுங்கலரிசியை புவிதனில் தின்னாதே
விழுங்கினால் நீயதனை, வெறும் பித்தனாவாயே!
—என்றிருக்கிறது, கொண்டுபோ.

(வேலையாள் கொண்டுபோகிறான்)

ச. ஏ காட்டாமெ! சாதங்கூட சாப்பிடாப் போனா நானு பட்டினியாயிருக்கிறதா?

வ. மஹாராஜா! அது மிகவும் நல்லதுங்க—(படிப்பதுபோல்)
　பட்டினியாயிருந்தாயானால், பாரினில் நீதான்
　நாளும், கெட்டியாயிருப்பாய் நீயும், கேடொன்று
　இல்லை உனக்கே என்றிருக்கிறது.

ச. அதெல்லாம் ஒதவாது ! ஐயா வயித்தியரே, ஒங்க எழுதெடுத்த புஸ்தகத்திலே, நான் சாப்பிடரத்துக்கு எது நல்லதுண்ணு சொல்லியிருக்கிறதோ அத்தெ கொண்டாரச் சொல்லுங்க.

வ. யாரடா அங்கே ?—இண்ணைக்கி பஞ்சந் தாங்கி சமைத்திருக்குதா ?

ம. (உள்ளிருந்து) இருக்குதுங்க.

வ. ஆனல் அதை சீக்கிரம் கொண்டுவா.

ச. அப்பாடா !

மற்ருெருவன் கேழ்வரகுக் களியைக் கொண்டு வந்து இலையில் பரிமாறுகிருன்.

ச. இதென்ன ஐயா இது ? களியையா தின்னணும் நானு ?

வ. அப்படி இழிவாக சொல்லிவிடாதைங்க—ராஜாவாள் (படிப்பதுபோல்)

பஞ்சம் தாங்கியாம் கேழ்வர்கைப் பார்த்தாலே போதுமப்பா ! தஞ்சமென்றடைவாய் நீ யதை தரணிதனில் நிகரிலை அதற்கே--என்று வயித்திய சாஸ்திரம் கூறுகிறதுங்க.

ச. என் தலெவிதி !—பசிக்குது, இத்தையாவது தின்ணரே !—இதுக்கு தொட்டுக்க ஒண்ணுமில்லையா ?

வ. ஏண்டா ! கழுதை ! ராஜா அவாளுக்கு தொட்டுக உப்பு ஏன் கொண்டுவரலே (ஆள் போகிருன்)

ச. உப்பா ?

கி. "உப்பைப்போல் உடலுக்கு, உறுதியைக் கொடுப்பதில்லை, தப்பாமல் நீயதனை, தைரியமாய்த் தின்பாயே" என்றிருக்குதுங்க. (ஒருவன் உப்பைக் கொண்டுவர அதைத் தொட்டுக்கொண்டு சபாபதி தின்கிருன்.)

ச. ஏன் ஐயா ! தாகத்திற்கு ஒண்ணுமில்லையோ ?

கி. அதோ ! பக்கத்திலெ வைச்சிருக்குதுங்களே.

ச. ஓ ! (பக்கத்திலிருக்கும் தர்மாஸ்பிளாஸ்க்(thermos flask)ஐஎடுத்து அப்படியே குடிக்கப் பார்க்கிருன்) என்ன ஐயா இது—ஒண்ணும் வரலையே !

ச.மு. (தூரத்திலிருந்து அதன் மேல் மூடியைக் கழற்றவேண்டுமென்று சைகை செய்கிருர்.)

ச. (அப்படியே செய்து) இன்னும் வரலையே அப்பா !—உம்—மந்திரி !

ச.மு. (கார்க்கையும் கழற்றவேண்டுமென்று சைகை செய்கிறார்.)

ச. (அப்படியே flask ஐ, திருப்பிப்பிடித்துக்கொண்டு கார்க்கை கழற்ற அதிலிருந்ததண்ணீரெல்லாம் மேஜையின்பேரில் விழுகிறது—வெளியில் வாத்யகோஷம்)

ச. இப்ப என்ன ஐயா அது வாத்தியம் ?

கி. (வெளியில் பார்த்து) ராஜா அவாளுக்கு இங்கிருக்கும் ரங்கநாதர் கோயில் பிரசாதம் மேளதாளத்துடன் வருகிறது.

ச. ரொம்ப சந்தோஷம்! சீக்கிரம் கொண்டாரச் சொல்லுங்கள் !—(எழுந்திருந்து மாடியின் ஜன்னல் வழியாகப் பார்க்கிறான்; அப்பொழுது கீழே, கோயில் பிருதுகளுடன் பெரியமேளம் சின்னமேளத்துடன், யானைமீது ஒரு பட்டர் வெள்ளித் தட்டில் பிரசாதம் கொண்டு வருகிறார். சகல வைபவங்களுடன், அதை யிறக்கி உள்ளே கொண்டு வருகிறார்கள்)

கி. ஒதுங்குங்கள் ! ஒதுங்குங்கள் ! — ரங்கநாத ஸ்வாமி கோயில் பிரசாதம், ராஜா அவர்களுக்கு வருகிறது ! (ஜனங்கள் வழிவிட பட்டர் அதை ஏந்திக்கொண்டு சபாபதி யிருக்கும் அறைக்குள் வருகிறார்.)

ச. அப்பாடா ! சரியான வேளைக்கு வந்தது !

ப. ராஜாவாள் ! அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாராயண அரங்கநாதர் அருந்தும் அரவணைப் பிரசாதம் ! (கொடுக்கிறார்)

ச. (அதை வாங்கிக்கொண்டு) ரொம்ப சந்தோஷம் (அதை மேஜையின் பேரில் வைத்து, சரிகை துப்பட்டாவைத் திறந்து பார்த்து) கீரை !—அதுவும் ஓட்டு பானையத்திலெ ! என்ன ஐயா ! பட்டரே ! கீரெ கொழம்பா !

ப. அப்படிச் சுலபமாகச் சொல்லக்கூடாது ! உலகளந்தோன் உண்ணும் உத்தமப் பிரசாதத்தை ! (பட்டர் போகிறார்)

ச. (அதை தின்றுகொண்டே) அப்பா !—மந்திரி ! இந்த மகாராஜா பட்டம் எனக்கு வேணும் இண்ணு தோணுது !

# மூன்றும் அங்கம்

## முதல் காட்சி

இடம் — ஜமீந்தார் வீட்டில் ஓர் அறை

சபாபதி முதலியார் சபாபதியுடன் பேசிக்கொண்டிருக்கிறார்.

ச.மு. என்ன சபாபதி ! இதுக்குள்ளே ஜமீந்தார் பட்டம்

வேண்டாம் என்கிறாயே?

ச. என்னப்பா! சாப்பாடு கூட சரியாக கெடைக்கலே! இது என்ன ராஜா பட்டம் அப்பா!—காலமெ என்னு டாறு—பட்டினி போட்டாங்க! நானு ராஜா ஆன பொறகு கூட கேவருதானு சாப்பாடு?

ச.மு. அதெல்லாம் பயப்படாதே, முதல் நாள் என்னமோ உபவாசமாம்! இண்ணைக்கு உனக்கு டிபினு (Tiffin)க்கு நீ வேண்டியபடியே செய்யச்சொல்லி யிருக்கிறேன்—என்ன பண்ணச்சொன்னே சமையல்காரனே?

ச. ஆ! அப்படி சொல்லப்பா!—இண்ணைக்கி, மத்யான பலகாரத்துக்காக, மைசூர் பாக்கு! ஓமப்பொடி!—தவலெவடை! கீர் பாயாசம்! பண்ணச்சொன்னெ—அந்த வயித்தியருக்கு "உங்களுக்கு 10 ரூபா தர்ரேன் நீங்க ஆட்சேபனெ பண்ணாதைங்க," இண்ணு சொல்லி யிருக்கிறேன்.

சமையல்காரன் ஒரு தட்டில் பலகாரம் கொண்டுவருகிறான்; வயித்தியரும், கிருஷ்ணசாமி முதலியாரும் பின்னால் வருகிறார்கள்.

கி. ராஜாவாள்! உத்தரவுபடியே மத்தியானம் பலஹாரம் வந்திருக்கிறது—தவளெ வடெ மாத்திரம் கொஞ்ச நேரம் பொறுத்து வரும்.

ச. சரி! நம்பொ—வந்தத்தெ மூன்னெ சாப்பிடலாம்!—(தட்டைத் திறந்து) இதென்னடாப்பா! இது நான் சொன்னது ஒண்ணையும் காணோமே! வேரேஎன்னென்னமோ இருக்குதே!

சமை. ராஜாவாள் சொன்னபடியே செய்துகொண்டாந் தேனே! இது மைசூர் பாக்கு! — மைசூரிலிருந்து நேராக வரவழைத்ததுங்க! (பாக்கை எடுத்துக் காட்டுகிறான்) —இது ஓமப்பொடி—நல்ல ஓமமாக பார்த்து வாங்கி பொடி பண்ணேனுங்க. (எடுத்துக் காட்டுகிறான்)—இது கீல் பாயாசம்! கீல்லே பாயாசம் நானு இதுவரையிலும் பண்ணதில்லெ! எனக்கு தெரிஞ்சவரைக்கும் பண்ணிக் கொண்டாந்தேனுங்க, கீல்லெ எவ்வளவு பாலெ ஊத்தினாலும் அது கருப்பாகத்தான் இருக்குதுங்க!

ச. உம்! வயித்தியரே! என்ன ஐயா இது! இத்தையா நானு சாப்பிடரது? — இதெல்லாம் வேண்டாம்—அந்த தவலெவடை ஏன் வரலெ?

கி. அரமனெ வில்லிங்ககிட்ட உத்தரவு பண்ணேன்! அவுங்க பெரிய தவளைங்களா—கொளத்துலெ புடிச்சி

கினுவர்ரதுண்ணு—கொஞ்சம் நேரம் புடிக்குங்க இண்ணு சொன்னுங்க.

ச. தவளெயெ யாரைய்யா புடிக்கச்சொன்னது ?

கி. ராஜாஅவாள்தானே தவளெ வடை உத்திரவு பண்ணது !

ச. நானு தவளெ வடையெ சொன்னே!—தவலெ வடை! தவலெ வடை!

வ. அப்பா! சமையல்கார மேஸ்திரி! ஏதாவது நல்ல தவலேயா பார்த்து நொறுக்கி, பொடிபண்ணி அத்தெ வடையாக சுட்டுக்கொண்டா சீக்கிரம்!

ச. ஏய்! எது சொன்னுலும் நீ தப்பா சொல்ரே! ஏ! வயித்தியரே! காலமெ சம்பளம் ஒசத்தணுமிண்ணு கேட்டைங்களே, உங்களுக்கு மாசத்திற்கு 50 ரூபாய் சம்பளம் ஒசத்தரேன்—நீங்க லீவ் வாங்கிகினு ஒரு மாசம் உங்க ஊருக்கு போய் வாங்க.

வ. சித்தம் ராஜா அவாள் (போகிருர்)

ச. ஓய்! காட்டாமெ-சமையல்காரா—நீங்களும் போங்க— (அப்படியே போகிருர்கள்)

ஏம்பா! இதென்ன இது! நீ என்னமோ சொல்லு வையே, வரவர கழுதெ மாமியார் போல் ஆனுள் இண்ணு! அந்த மாதிரி இருக்குது அப்பா—எனக்கு இந்த ஜமீன்தார் ராஜா பட்டம் வேணும்பா!—சரியா எனக்கு சாப்பாடு போட்டா நானு ராஜாவா யிருக்கி றேன்—இல்லாப்போனு நீ ராஜாவா பூடப்பா!

ச.மு. சேசெ! அப்படி செய்யாதே! இனிமேலெ சாப்பாடு சமாசாரம் நானு பார்த்துக்கறேன் பயப்படாதே!

---

## இரண்டாம் காட்சி

இடம் —அரண்மனே படுக்கை யறை,

காலம் — இரவு.

கிருஷ்ணுசாமி முதலியார், சபாபதியையும் சபாபதி முதலி யாரையும் அழைத்துக்கொண்டு வருகிருர்.

கி. ராஜா அவாள்! இதுவும் ஒரு படுக்கையறை தாங்கள், எங்கு படுத்துக்கொள்ள விரும்புகிறீர்களோ அங்கு படுத்துக்கொள்ளலாம்.

ச. (சுற்றிப்பார்த்து) அத்தோடெ இதுதான் நண்ணயிருக் குது, நானு இங்கேதான் படுத்துகிறேன்.

கி. உங்களிஷ்டம்—ஆனால் ராஜா அவர்களுக்கு ஒண்ணு சொல்ல மறந்தேன்; இந்த அறையில் ஒரு குட்டி சைத்தான் பிசாசு, இருப்பதாகச் சொல்லுகிறார்கள். அதற்கு பயமில்லாவிட்டால் தாங்கள் இங்கேயே படுத்துக்கொள்ளலாம்.

ச. குட்டிச்சைத்தானுமில்லெ பிசாசுமில்லெ இண்ணு, மந் திரி, நீங்க சொல்லலெ முன்னே!— அதுக்கெல்லாம் நானு பயப்படமாட்டேன் காட்டாமெ—நீங்க போவ லாம் இனிமேலே—(கிருஷ்ணசாமி முதலியார் போகிறார்) ஏம்பா! குட்டிசைத்தான் பிசாசு இருக்குதாப்பா?

ச.மு. அதெல்லாம் இல்லவேயில்லெ—இண்ணு நெனெக்கி றேன்.

ச. சரிதாம்பா! இந்த காட்டாமெ என்னெ சும்மா பயப் படுத்தருரு—நீ போயி மெத்தைமேலே படுத்துக் கோப்பா! (சபாபதி முதலியார் போகிறார்) இந்த ரூம்லெ பாலு, பழம் வெத்திலெ—எல்லாம் வைச்சிருக்குது, இத்தெவுட்டுட்டு பக்கத்து அறையிலே ஒண்ணுமில்லெ அங்கேயா படுத்துகிறது? (நாற்காலியில் உட்கார்ந்து பக்கத் தில் டிபாவின் பேரில் வைத்திருக்கும் பால் ஏனத்தை எடுத்துப் பார்க்கிறான்)

(ஆகாசத்திலிருந்து ஒரு குரல்) வேண்டாம்!

வேண்டாமா!-யார் சொன்னது! யாரையும் காணோம்! —சும்மா பயந்தேன்! (உட்கார்ந்து பால் டம்ளரை எடுத்து வாயில்கவிழ்க்க அதிலிருந்து வெண்மனல் விழுகிறது) தூ து! மணலு மணலு! பார்த்தாபாலாட்டம் இருந்துது. போனபோவுது பலகாரம்சாப்பிடலாம் (நொக்கல்போலிருப்பதை எடுத்து வாயில் போட்டுக்கொள்கிறான்) இதென்ன இது! கடிக்க முடியலெ! (துப்புகிறான்) கல்லு! (தட்டிப் பார்த்து) எல்லாம் கல்லா யிருக்குது! என்ன மாயமாயிருக்குது! வெத்தலெ பாக்காவது போட்டுக்கினு படுத்துகலாம்! (அந்த தட்டில் கை வைத்து) என்ன எடுக்க முடியலெ (அதைத் தொட்டுப் பார்த்து) அடாடா! புதுச்சேரியிலே பண்ராங்களே அந்த மாதிரி அல்லவா இருக்குது;—நம்பளே யாராவது எழுத்தாளி பண்ராங்களா? அல்லாப்போன! நெஜமா—குட்டிச்சைத்தான் இருக்குதா இந்த அறை யிலெ!—அப்பாவே கூப்பிடவா?—வேணம், யாரான

பார்த்தா நானு பயங்காளி இண்ணு நெனைச்சிகிவாங்க! படுத்துகினு தூங்கிட்டு நாளெ காலமே கேக்கலாம்— (படுக்கையில் படுக்கப்போய் தொப்பென்று விழுகிருன்) ஐ ஐயோ! பிசாசு! பிசாசு! (என்று கூவிக்கொண்டே மெத்தைக்கு போய்விடுகிருன்—இச்சமயம் கிருஷ்ணசாமி முதலியார் மெல்லவந்து டம்ளரில் பாலையும், தட்டில் நொக்கலையும், **வெ**ற்றிலை பாக்கையும் வைத்துவிட்டு படுக்கையை தலைப்பக்கம் தூக்**கும்ப**டியான விசையை வைத்துவிட்டுப் போய்விடுகிருர்.)

சபாபதி, சபாபதி முதலியாருடன் வருகிருன்.

ச.மு. (முதலில் நுழைந்து) என்ன சபாபதி? ஒன்றையும் காணுமே!

ச. (மெல்ல நுழைந்து) இருக்குது அப்பா எதுவோ பிசாசு!—அந்த பாலெ குடிச்சி பாரு.

ச.மு. (அப்படியே செய்து) பால் நண்ணுதான் இருக்குது—நீ வேண்டுமென்ருலும் குடித்து பார்.

ச. (மெல்ல குடித்து பார்த்து) ஆமாம்பா!—இந்த நொக்கலெ சாப்பிடு பாக்கலாம்!

ச.மு. (அப்படியே செய்து) என்ன பயித்தியக் காரனுயிருக்கிருய், ரொம்ப நண்ணுயிருக்குதுதே.

ச. (சாப்பிட்டுப் பார்த்து) ஆமாம்பா!—என்னமோ மாய மாயிருக்குதப்பா! (வெற்றிலை தட்டைக் கவிழ்க்க அதிலிருந்து எல்லாம் கீழே விழுகிறது.)

ச.மு. என்னடாப்பா! கீழே கொட்டிவிட்டாயே வெற்றிலை பாக்கை யெல்லாம்!

ச. இல்லெப்பா!—முன்னெ கவுத்தா அப்படியே ஒட்டி கினு இருந்துதப்பா!

ச.மு. நீ கனவுகினவு கண்டாயா என்ன?

ச. இல்லெப்பா!—எனக்குகூட சந்தேகமாயிருக்குது—இந்த கட்டில்லெ படுத்துக்கப்பா பாக்கலாம்.

ச.மு. (படுத்துக்கொண்டு) ஏன் சரியாதானிருக்குது—சபாபதி, நானு சொல்றத்தெ கேளு—இப்படியெல்லாம் நடந்தாயோ, ஏதோ நம்ப ராஜாவுக்கு பயித்தியம் புடிச்சிருக்குது இண்ணு உன்னெ தள்ளிவுடுவாங்க ஜனங்களெல்லாம், பேசாதே இனிமேலாவது படுத்துகினு தூங்கு (தான் வெளியே போகப் பார்க்கிருர்.)

ச. அப்பா!—எதுக்கும்—நீ பக்கத்து படுக்கைமேலே படுத்துக்கப்பா!

ச.மு. அப்படியே (போகிருர்.)

ச. (மறுபடியும் படுக்கையில் படுத்துக்கொள்ள பக்கத்து ரூமில் இருந்து கிருஷ்ணசாமி முதலியார் விசையை வேகமாய் முடுக்க கட்டிலின் தலைபக்கம் சபாபதியை தூக்கி எறிகிறது!) அப்பா! அப்பா! பிசாசு! பிசாசு! (வெளியில் ஓடுகிறான்; கிருஷ்ணசாமி முதலியார் விசையைத்திருப்ப கட்டில் சரியாய்ப் போய்விடுகிறது.)

சபாபதி முதலியாருடன் சபாபதி பயத்துடன் அறைக்குள் நுழைகிறான்.

ச. நீ ஒண்ணும்மிண்ணு பாரப்பா! கட்டில் கீழெ பிசாசு இருக்குது!

ச.மு. (அப்படியே பார்த்து) சத்! ஒண்ணுமில்லே—பயங்காளி—என் தூக்கத்தெ சும்மா கெடுக்கரே!

ச. இல்லெப்பா!—நீ—இந்த ரூமிலெ படுத்துக்கொ—ஆறு—நானு பக்கத்து ரூமிலே படுத்துகிரேன்.

ச.மு. அப்படியே ஆவட்டும் (படுத்துக்கொள்ளுகிறார், சபாபதி போகிறான்.)

---

## மூன்றும் காட்சி

இடம் — ஜமீன்தார் வீட்டில் மடப்பள்ளிக் கடுத்த அறை.

காலம்—இரவு—நடுவில் ஒரு விளக்குமாத்திரம் எரிந்துக்கொண்டிருக்கிறது. சபாபதி முதலியார் கிருஷ்ணசாமி முதலியார், வயித்தியர் மூவரும் உட்கார்ந்து பலகாரங்கள் முதலியவைகளை யெல்லாம் வைத்துக்கொண்டு புசித்துக்கொண்டிருக்கின்றனர்— சபாபதி அங்கிருக்கும் ஜன்னல் வழியாக மெல்ல பார்க்கிறான்.

ச.மு. என்னப்பா இது! அவனெ பட்டினி போட்டுட்டு நம்ப மாத்திரம் சாப்பிடரது எனக்கென்னமோ நண்ணயில்லெ.

வ. எனக்கும் பரிதாபமாகதான் இருக்குது!—ஒவ்வொரு தட்டு வரும்போதும் வாயெ தெறக்கிறான். மூடரான்! தெறக்கறான் மூடரான்! எனக்குச் சிரிப்பு அடக்க முடியலெ (சிரிக்கிறார்,)

கி. ஸ்! உறக்க சிரிக்காதைங்க! மெத்தெ மேலெ இருக்கிறவனுக்கு கேட்கப் போவுது!

---

## நான்காம் காட்சி

இடம் — சபாபதி படுக்கையறை.

காலம் இரவு — சபாபதி மெல்ல வருகிறான்.

ச. ஓ! அப்படியா! சமாசாரம்! என்னடா சத்தம் கேக்குதே இண்ணு போய் பாத்தது நல்லதாச்சி! நம்மெ

அவங்கல்லாம் சேந்து என்னமோ ஏமாத்தி, சாப்பாட்லெ மண்ணெ போட்டு, இவங்கல்லாம் மாத்திரம் எல்லாம் மொக்கருங்க! இருக்கட்டும் இருக்கட்டும்! அந்த வயித்தியன்கூட அல்வா திண்ணுகினு இருந்தான், எனக்கு ஒதவாது ஒதவாது இண்ணு சொல்லிட்டு—நாளைக்கு ஆவட்டும் அவனுக்கு வழி வைக்கிரேன்—இப்பொ என்ன செய்யரது? எனக்கும் ரொம்ப பசியாயிருக்குது! கொஞ்சம் பொறுக்கட்டும் வெளக்கெல்லாம் அவிக்கட்டும்—நமக்குதான் வழிதெரியுமே—அப்புறம் போய்—அங்கெ ரொம்ப மீந்திருக்குது—அல்லாத்தையும் சொளெயம் பண்ணிட்டுவர்ரேன்.

---

## ஐந்தாம் காட்சி

இடம் — மாட்டுத் தொழுவம்.

காலம் — நள்ளிரவு—சபாபதி மெல்ல வருகிருன்.

ச. இதாம் அந்த அறையிண்ணு நெனெக்கிரேன்! படி எறங்கி வந்தவுடனே சோத்துகை பக்கம் திரும்பனெ அல்லா? முன்னெ வந்தபோது பீச்சகை பக்கம் திரும்பனொ? இல்லெ இல்லெ—சோத்துகை பக்கம் தான்!—இந்த அறைதான். (இருட்டில் துழாவுகிருன்; அங்குள் கரிப்பானையெத் தடவிப் பார்த்து) பெரிய பாத்திரங்களாயிருக்குது!—கண் நண்ணு தெரியலெ வெளிச்சமில்லாமே (கரிக்கையால் கண்ணைத் துடைத்துக் கொள்ள, முகமெல்லாம் கரியாய்ப் போய்விடுகிறது.) அல்வா வைத்திருந்துதெ—அது எங்கே? (அங்கு ஒரு பக்கமாயுள்ள பாத்திரத்தில் கையிடுகிருன்.) ஆ! இதோ இருக்கிறது! (அதிலிருக்கும் சாணியை எடுத்து வாயில் போட்டுக்கொண்டு) து! தூ! சாணி! (துப்புகிருன்.) சீச்சீ! மாட்டுத் தொழுவத்திற்கு வந்தூட்டேன்! (ஓடிப்போகப் பார்க்கும்போது, தடுக்கி அங்கிருக்கும் கழுநீர்ப் பானையின்மீது விழ, அது உடைந்து உடம்பெல்லாம் கழுநீரால் நனைக்கப்படுகிருன்.) இந்த சப்தத்தை கேட்டு சபாபதி முதலியார் எலெக்டிரிக் டார்ச் விளக்குடன் வந்து பார்க்கிருர்.

ச.மு. என்ன! சபாபதி!—இங்கேயெல்லாம் ஏன் வந்தே! என்னெ கேக்காதே எங்கேயும் போவத் தேவலெ இண்ணு சொன்னேனெ!

ச. ஆமாம்பா! நீங்கல்லாம் மாத்திரம் பலகாரம் எல்லாம் சாப்பிட்டுட்டு, என்னெ பட்டினி போட்டைங்களே!—

ச.மு. ஓ!—அத்தெ பாத்துட்டையா! வாவா! இனிமேலே அப்படி செய்யாதிருக்கும்படி பாத்துகரேன். (கிருஷ்ண சாமி முதலியார் ஜன்னல் வழியாய் பார்த்து நகைக்கிறார்.)

ச. அப்பா! அந்த வயித்தியனுக்கு—முக்கியமா—பட்டினி போட்டதாம், என் வயித்தெரிச்சல் தீருமப்பா! (போகிறார்கள்.)

---

# நான்காம் அங்கம்

---

## முதல் காட்சி

இடம் — அரண்மனையில் அந்தரங்க அறை.

காலம் — இரவு.

சபாபதியும், சபாபதி முதலியாரும் பேசிக்கொண்டிருக்கிறார்கள்.

ச. அப்பா! எனக்கு இந்த ஜமீந்தார் வேலெ வாணும்பா!

ச.மு. ஏண்டாப்பா! என்ன மறுபடியும் வெறுப்பு?

ச. பெரிய கஷ்டமாயிருக்குதப்பா—அத்த நாட்டாமெக்காரு நாளைக்கே வேட்டையாட புறப்படனுமிண்ணு சொன்னாரப்பா! நானு காட்டுக்கு வேட்டையாடப் போவமாட்டேன். இப்பவே சொல்லிவிட்டேன், ஜமீந்தாரிண்ணு, நண்ணு நாலு வேளெ சாப்பிட்டுட்டு, தூங்கர வேலெஇண்ணு பாத்தா இதென்ன பெரிய எழவாயிருக்குது! நானு திரும்பி ஊருக்குப் பூடரேம்பா!

ச.மு. சேசே! அப்படி செய்யாதே!—நானு சொல்ரபடி கேளு—நானு ஏதாவது போக்கு சொல்லி இந்த—நாட்டாமெகாரரெ ஒரு பக்கமாக அழச்சிகினு போகிறேன், அந்த சமயம் பார்த்து நீ ஒரு பெரிய மரத்து மேலெ ஏறி ஒளிச்சிகோ— சாயங்காலமா எறங்கி வந்தூடு—அப்புறம் நானு பாத்துகுறேன்.

ச. அதாம்பா நல்லயுக்தி.

---

## இரண்டாவது காட்சி

இடம் — அடர்ந்த காடு

காலம் — பகல் — தூரத்தில் காட்டைக் கலைக்கிற சப்தம்

சபாபதி ஓடி வருகிறான்கையில் ஒரு ஈட்டியுடன்

ச. அப்பா! அந்தமுட்டும் தப்பிச்சுகினு ஓடி வந்தூட்டேனே!—இதான் சரியான மரம், ஒயரமாயிருக்குது

இதும்பேர்லெ ஏறிக்கரேன்!—கையிலே ஈட்டி வைச்சிகினு ஏறமுடியாது—இத்தெ இங்கே நட்டுவைச்சுடரேன், எதுவானு புலிகிலி வந்தாலும்—பயந்து ஓடிபூடும் (ஈட்டியை கீழே நட்டுவைக்கிறான். அருகில் சப்தம்—புலி! புலி! அதோ ஓடுது!—ஓடுது! சபாபதி விரைந்து மரத்தின் பேரில் ஏறிக்கொள்கிறான். ஒரு பெரிய புலி வந்து அவன் மீது பாய ஈட்டியின் பேரில் விழுந்து மார்பில் குத்திக்கொண்டு சாகிறது. கொஞ்சம் பொறுத்து சபாபதி மெல்ல கண்விழித்துப் பார்த்து மரத்தின் காய் ஒன்றைஅதன் மீது விட்டெறிகிறான்) ஓகோ! ஈட்டி மார்லெ குத்தி செத்து பூட்டுது! (மெல்ல இறங்கி வந்து பார்த்து) ஈட்டி உடைந்து போச்சி புலி விழுந்த வேகத்திலெ!—ஒரு யுக்தி பண்ரேன்! (அங்கிருக்கும் முள் ஒன்றை எடுத்து உடம்பில் கீறிக்கொண்டு, புலி ரத்தத்தை தடவிக்கொண்டு, உடைந்த ஈட்டியின் கைபிடியைக் கையில் பிடித்துக்கொள்கிறான்) அதொ, அவங்கெல்லாம் வர்ராப்போலே இருக்குது! (மூர்ச்சையானது போல் பக்கத்தில் விழுகிறான்)

சபாபதி முதலியாரும், கிருஷ்ணசாமி முதலியாரும் ஓடி வருகிறார்கள்.

கி. அதொ புலி விழுந்து கிடக்கிறது!

ச.மு. ஐயோ! சபாபதியெ புலி கொண்ணூட்டாப்போலெ இருக்குதே! செத்துப்பூட்டானு என்ன?

ச. (மெல்ல) இல்லெப்பா!—மந்திரி! நானு மூர்ச்சையாயிருக்கறேன்!

ச.மு. அம்மட்டும்!

கி. சபாபதி—உம்—ராஜா அவாள் ரொம்ப சந்தோஷம்! இந்த புலி என்னமா செத்துது?

ச. என்னமா செத்துதா! அதும் மார்லெ என்ன இருக்குது பாருங்கையா!—காட்டாமெகாரரே!

கி. அடாடா! ராஜாவாள் கையிலெ நாங்கள் கொடுத்த ஈட்டி! எப்படி கொண்ணீங்க ராஜாவாள் இத்தெ?

ச. சொல்லட்டுமா! நீங்கல்லாம் அந்த பக்கம் போயி காட்டெ கலெச்சைங்களா!—எனக்கு இந்த பக்கம் புலி வரும் இண்ணு தெரிஞ்சி—வாசனேயிலெ—இந்தப்பக்கம் ஓடிவந்து—காத்துகினு இருந்தேன்—ஒடனே புலி ஓடிவந்து எம்பேர்லே பாஞ்சிது! குத்தனேம் பாரு ஒரு குத்து! ஈட்டியாலெ! அதும் மார்லெ! புலி செத்துபூட்டுது! ஈட்டி உடைஞ்சிபூட்டுது!—நானு மூர்ச்சையா பூட்டேன்!

**ச.மு.** உடம்பெல்லாம் ரத்தம் எப்படி வந்தது ராஜாவுக்கு?

**ச.** ஏன்!—புலி சாகரத்துக்கு முன்னே என் உடம்பெல் லாம் பூறிஉட்டுது!

**ச.மு.** அந்த மட்டும்—காயம் அதிகமாயில்லெ, பூரிதான் இருக்குது!—அடெ வேடருங்களே! அந்த பலகெயெ இப்படி கொண்டாங்க!—அதும்பேர்லெ செத்த புலியெ தூக்கி வையுங்க! ராஜாவாள், நீங்களும் அதும் பக்கத்திலெ உக்காந்துங்க!—தூக்குங்கடா எட்டுப் பேரா—அப்படியே ஊர்கோலமா கொண்டுபோவ ணும் ராஜாவெ! (அப்படியே செய்கின்றனர்) கொஞ்சம் பொறுங்க! — அந்த போடக்கிராபரே கூப்பி டுடா, அப்படியே ஒரு படம் புடிக்க சொல்லு!—ராஜா வாள் புலியெ எப்படி கொண்ணீங்களோ அந்தமாதிரி ஈட்டியெ புடிச்சிங்க! (சபாபதி ஈட்டியைத் திருப்பிப் பிடித்துக் கொள்கிறான்)

**ச.மு.** ஏய்!—ஈட்டியெ—

**கி.** அல்லாம் சரிதான் — தடுக்காதெங்க மகாராஜாவே! அப்படியே படம் எடுக்கணும்! (படம் பிடிக்கிறார்கள், பிறகு தப்பட்டை யெல்லாம் அடித்துக்கொண்டு அப்படியே தூக்கிக் கொண்டு போகிறார்கள்)

---

## மூன்றும் காட்சி

இடம் — அரண்மணையில் சங்கீத மண்டபம்

காலம் — மாலே

சபையில் சங்கீத வித்வான்கள் முதலியோர் நிறைந்திருக்கின்றனர்.

சபாபதி, சபாபதி முதலியார், கிருஷ்ணசாமி முதலியார் வருகிறார்கள்

**கி.** சத்து! சத்து! ராஜாவால் வருகிறார்!

சபாபதி உயர்ந்த ஆசனத்தில் உட்காருகிறான்,

**ச.** மந்திரி! நீங்க எம்பக்கத்திலே இப்படி உட்காருங்க! (சபாபதி முதலியார் அப்படியே செய்கிறார்)

**கி.** கச்சேரி ஆரம்பம்!—முதலில், தொண்டைகட்டி ராஜ புறம் அபஸ்வரசாஸ்திரிகள் வாய்ப்பாட்டு, பிடில் குண் டப்பா, மிருதங்கம், மேளன கிருஷ்ண நாயுடு! கடம் தொப்பை முதலியார், கஞ்சிரா, கொணுகோல், கோபால நாயகர் (பாடகர்கள் எல்லாம் வந்து எதிரில் உட் கார்ந்து ஸ்ருதிசெய்துகொள்ளுகிறார்கள்)

ச. (ஒருபுறம் சபாபதி முதலியாருக்கு) ஏம்பா! — வாய்பாட்டு இண்ணு—இவரென்ன ஓரோண் ஒண்ணு சொல்லு வாரா என்ன?

ச.மு. (சும்மாயிருக்கும்படி சைகை செய்கிறார்)

ச. ஏனையா! கச்சேரி ஆரம்பிக்காதே என்னமோ கொய் கொய் இண்ணுகினு இருக்கரைங்களே! அது என்னது?

அ.ச. சுருதி வேணுமே.

ச. இதோ கொண்டாரச் சொல்ரேன்! யாரங்கே ஒரு பெரிய சுத்தியா கொண்டாரச்சொல்.

அ.சா ராஜாவால்! சுத்திவேண்டாம்! ஸ்ருதிசெய்துகொள்ளு கிறோம்!

ச. அதெல்லாம் கடைசியிலே வைச்சிங்க! இப்ப உடனே ஆரம்பிங்க.

(ஸ்ருதி செய்யும்போது தம்பூர் தந்தி அறுந்துபோகிறது)

ச. ஏய்! என்ன ஐயா அது அவசகுனம்!— என்னதது?

த. தம்பூர்.

ச. உன் ஊர் கேக்கலெ ஐயா—அறந்துதெ,அது எண்ண இண்ணே?

த. தம்பூர் தந்தி அறுந்துபோச்சுங்க

ச. தப்பு! மெலீஸ்தந்தியா போடக்கூடாது, யாரடா அங்கே! மந்திரி, சேவகனெ அழச்சி, நம்ப கொடி கட்டர இரும்பு தந்தி யிருக்குதே, பலமாயிருக்கும் அது, அத்தெ கொண்டுவந்து கொடுக்கச்சொல்லுங்க (கடக்காரன் அதைத் தட்டி பார்ப்பதைக் கண்டு) ஐயா கொஞ்சம் நிறுத்துங்க, நீங்கபானெயெ உடைக்கப்போரைங்க; மந்திரி, இவருக்கு ஒரு நல்ல இரும்பு பானையா கொண்டுவந்து கொடுக்கச்சொல்லு! (மிருதங்கம் ஸ்ருதி செய்ய) என்ன ஐயா கஷ்டப்படரைங்க, நடுவுலெ கட்டையெ வைச்சி தட்டன, சரியாபூடும்.

மி. கொஞ்சம் ரவையிருந்தா கொண்டுவர சொல்லுங்க.

ச. ரவெக்கி என்ன கொரச்சல்—காட்டாமெகாரே! காலமே ரவெ உப்புமாவு பண்ணுங்க! அதிலெ கொஞ் சம் கொண்டுவந்து கொடுக்கச்சொல்லுங்க.

அ.சா (ஸ்ருதியெல்லாம் செய்து முடிந்தபிறகு) ராஜா அவாள்— என்ன பாடணும் இண்ணு உத்தரவாகிறதோ?

ச. உம், மொதல்லெ—மங்களம் பாடுங்க—மங்களகரமா யிருக்கவேணுமா ?

அ.சா ராஜாவால்! கோவிச்சிக்ககூடாது! கடைசியிலே மங்களம் பாடுகிற வழக்கம். மொதல்லெ விக்னேஸ்வரர் பாட்டு பாடுகிறேன் (வாதாபி கணபதி பாடுகிருர்) பிறகு வர்ணம், ராஜாவுக்கு எந்த வர்ணம் பிரியமோ ?

ச. வர்ணமா ?—நீலவர்ணம்! (சபையோர் நகைக்கிருர்கள்)

ச.மு. நீலாம்பரி வர்ணம் பாடச்சொல்லுகிருர்! ராஜாவால்! (பாடகர் பாடுகிருர்)

ச. கொஞ்சம் நிறுத்துங்களய்யா பாட்டெ !—ஐயா! (கொனுகோலுகோபால நாயகரைப் பார்த்து) அவர் தான் நண்ணு பாடராரெ! அவருக்கு ஏன் நீங்க நங்கு காட்டரைங்க?

கோ. இல்லெங்க! இது கொனுகொலு கொடுக்கரது.

ச. அப்படியாணல்-உங்கமூஞ்சியெ திருப்பிகினு கொடுங்க! (பிறகு பாடகர் "ஏறுமயி லேறி விளையாடுமுகம் ஒன்றே" பாட்டைப் பாடுகிருர்)

அ.சா மகாராஜா அவாளுக்கு இந்த பாட்டு பிடிக்கலெயோ?

ச. இப்போ, ஆறுமுகம் இண்ணு சொல்லிவிட்டு—ஒம்பது முகம் கணக்கு சொல்ரைங்களே ஐயா!

அ.சா இல்லெங்களே !

ச. பாடுங்க சொல்ரே (ஒவ்வொரு அடியாகப் பாட சபாபதி கணக்கு $1\frac{1}{2}$, $1\frac{1}{2}\times1\frac{1}{2}=3$, $3\times1\frac{1}{2}=4\frac{1}{2}$ என்று கணக்கிட்டு 9 சொல்லுகிருன்.)

அ.சா. பல்லவி ஆரம்பிக்கப்போறேன்—என்ன ராகத்திலே பல்லவி வேண்டுமோ உத்தரவாகணும்.

ச. தமிழ் ராகமாயிருக்கணும்—தெலுங்கு ராகம் வேணும்.

அ.சா. சித்தம்—தமிழ்லெயே பாடரேன்—என்ன ராகத்தில் என்று கேட்டேன்.

ச. (சபாபதி முதலியாரைத் திரும்பி பார்க்க, அவர், "தோடி தோடி" என்று மெல்ல சொல்கிருர்) ஐயா! தோட்டி ராகத்திலே பாடுங்க. (பாடகர் தோடி ராகம் ஆலாபனை செய்கிருர்.)

ச. ஐயா, பாடகரே! என்னமோ பாடணைங்களே இதுக்கு என்ன அர்த்தம் ?

அ.சா. இது ராக ஆலாபனை இதற்கு அர்த்தம் கிடையாது!

ச. அர்த்தமில்லாத பாட்டு எனக்கு வேணும்! அர்த்த மிருக்கிறதா பாடுங்க.

அ.சா. அப்படியே (பல்லவி ஒன்று பாடுகிறார்.)

ச. ஐயா! பாடகரே! என்ன சும்மா பாடினதையே திருப்பி திருப்பிப் பாடிகினு இருக்கரைங்களே! அப்பறம் மறந்து போச்சா என்ன?

அ.சா. பல்லவி அப்படிதான் பாடணுங்க.

ச. ஆனா அது போதும் நிறுத்துங்க.

அ.சா. அப்படியே—இப்பொ பிடில்காரன் ஒரு ஆவர்த்தம்.

ச. உம்! (பிடில் ஒரு ஆவர்த்தம் வாசிக்கிறான்.)

ச.மு. (ஒரு புறமாக சபாபதிக்கு) அவன் வாசிக்கும்போது நடுவிலெ பேஷ் பேஷ் இண்ணு சொல்லு (பிடில்காரன் வாசிக்கும்போது பிடில் தந்தி பட்டென்று அறுந்து போகிறது.)

ச. (அச்சமயம்) பேஷ்! பேஷ்! பலெபேஷ்!

அ.சா. கொனுகோல், நீங்க ஒரு ஆவர்த்தம் ஆகட்டும்.

ச. இருங்கையா! (தம்பூர் ஸ்ருதிகாரனைப் பார்த்து) அவர் பெரிய வாத்தியமா வைச்சிகினு இருக்கராரு, அவரெ ஒரு ஆவட்டம் வாசிக்கச் சொல்லுங்க.

அ.சா. அவர்—ஆவர்த்தம்—வாசிக்கமுடியாது.

ச. முடியாபோனா—இந்த கச்சேரியெ நிறுத்துங்க—அப்பறம் என்ன?

கி. மிருதங்ககாரு, கடக்காரு இருக்கிராங்க, ரெண்டுபேரும் கெட்டிக்காரருங்க! இவங்க ரெண்டுபேரையும் மாத்தி மாத்தி ஒரு ஆவர்த்தம் வாசிக்கச் சொல்லி யார் கெட்டிக்காரரு இண்ணு ராஜாவால் தீர்மானம் பண்ணனும்.

ச. ஆ! அப்படியே! வாசிங்கையா! (அவர்கள் வாசித்து முடிந்தவுடன்) இந்த மிர்தங்கக்கார்தான் பலெ கெட்டிக்காரரு! தலெயெ ரொம்ப இவர்தான் ஆட்டனரு! குடுமி கூட அவுந்து போச்சி!—அப்புறம் என்ன?

கி. ஆட்டக் கச்சேரி.

ச. ஆட்டுக் கச்சேரியா? ஆடுங்கெல்லாம் ஆடுதா என்ன?

கி. இல்லெ—சதிர்கச்சேரி—தேவடியாள் ஆடுவாள்!

ச. வரச்சொல்லுங்க, சீக்கிரம் தேவடியாளே!

கச்சேரித் தேவடியாள் பக்கவாத்தியகாரருடன்வந்து கனகசபாபதி தரிசனம் ஒருநாள் எனும் பாட்டை அபிநயம் பிடிக்கிறாள்.

ச. ஏய்! அவதான் தேவடியா ஆடரா, நீ யாரு?

காளி. நானுநட்டுவனுங்க, எம்பேர் காளி,

ச. ஏய்! கச்சேரியெ நிறுத்துங்க—ஏய் நட்டுவக்காளி!—நீதானெ இவளுக்கு ஆட்டம் சொல்லிக் கொடுத்தெ?

கா. ஆமாம் ராஜா!

ச. இப்படி வா இப்படி—சபாபதி இண்ணு எம்பேர்லெ பாடனது சரிதான்—ஆனல் அதுக்கு அபிநயம் புடிக்கும்போது காலெ மடக்கிக் காட்டனளே அது என்ன? எனக்கு காலு மொடமாவா இருக்குது?

கா. இல்லீங்க! இது சிதம்பரத்திலெ இருக்கர நடராஜர் பேர்லே பாட்டு.

ச. ஓ!—போதும்—இனி எம்பேர்லெ பாடி அடச் சொல்லு.

கா. உத்தரவுபடி (மெத்த அழகுள்ள துரை இவர் ஆரடி? என்கிற பாட்டைப்பாட தேவடியாள் அபிநயம் பிடிக்கிருள்; பாட்டு முடிந்தவுடன்) மகாராஜா, இது எப்படி யிருக்குதோ?

ச. ரொம்ப நண்ணு இருக்குது—ஆனு—இதிலெ ஒருதப்பு இருக்குது — என்னெபத்தி பாடும்போது—ஆரடி இண்ணு சொன்னது தப்பு—நானு அஞ்சி அடிதான் இருக்கரேன்—இனிமேலெ இந்த பாட்டெ பாடிணு—மெத்த அழகுள்ள துரை அஞ்சடி, இண்ணு பாடச் சொல்லு.

கா. சித்தம் மஹாா பருப்பு!

கி. ராஜாவால்! இந்த ரூபாயை இவளுக்கு வெகுமானமா கொடுக்கணும்!

ச. சீச்சீ! இது போதாது!—நானு யோசிச்சி—நல்ல வெகுமானமா அப்பறம் — கொடுத்தனுப்பரேன் இண்ணு சொல்லு.

(தேவடியாள் வெளியே போகிருள்—சபை கலேகிறது.)

---

## நான்காவது காட்சி

இடம் — அரண்மனே முற்றம்.

*சபாபதி ஒரு பெரிய நாற்காலியில் உட்கார்ந்துகொண்டிருக்கிருன். கிருஷ்ணசாமி முதலியார், சபாபதி முதலியார் ஒரு பக்கம் நிற்கின்றனர். போடோ பிடிப்பவன் எதிர்பக்கம் காமிராவை ஏற்பாடு செய்கிருன்.*

போ. மஹாராஜா! முன்னே புடிச்சபடம் கொஞ்சம் கெட்டுப் போச்சி, கொஞ்சநேரம் அசையாமே இருக்கணும்.

ச. அப்படியே!—அப்பா! மந்திரி! என்னமோ கீழே மள மள இண்ணுதப்பா! (நாற்காலியின் நடுபலகையை மெல்ல கிருஷ்ணசாமி முதலியார் பின்புறத்திலிருந்து இழுத்துவிட, சபாபதி நடுவில் விழுகிருன், அச்சமயம் படம் எடுக்கப்படுகிறது.)

போ. ஐஐயோ! படம் கெட்டுபூட்டுதுங்க! அசையக் கூடா திண்ணனே! ஐயா! மகாராஜாவுக்கு வேறே ஒரு நல்ல நாற்காலியா கொண்டாந்து போடுங்க! (அப் படியே செய்ய அதன்பேரில் சபாபதி உட்காருகிருன்.)

ச. சீக்கிரம் புடியுங்க ஐயா! என் காலு சுளுக்கிகினு நோவுது.

போ. இதோ ஆச்சிங்க—கொஞ்சம் அசையாமே இருங்க— (அச்சமயம் வெளியில் கழுதை கத்துகிறது,)

ச. ஏய்! யாரங்கே? அந்த கழுதையெ கத்த தேவலே இண்ணு சொல்லு.

போ. மகாராஜா, மொகத்தெ சுளிக்கக் கூடாது.

ச. ஆனு, அந்த கழுதையெ கத்தாமே இருக்கச் சொல் லுங்கையா! அது கத்தனு எனக்கு கோபம் வருது!

போ. கழுதையேபத்தி கொஞ்சம் நினைக்காமே இருங்க மகாராஜா, இந்த காமிராவின் சூட்சுமம் என்னுண்ணு, யார் மனசுலே எப்படி நினைக்கராங்களோ அப்படியே படத்திலேயும் விழுந்து விடும்.

ச. சரிதான்! கழுதையெபத்தி நினைக்கலே!-கழுதையெ பத்தி நினைக்கக் கூடாது! கழுதையெபத்தி நினைக் கவே கூடாது!

போ. மகாராஜா! படம் எடுத்தாகிவிட்டது! - அரண்மனைக் குப் போகலாம்-சாயங்காலம் படத்தை டெவலப் பண்ணி கொண்டு வருகிறேன்.

---

## ஐந்தாம் காட்சி

அதே இடம். காலம் சாயங்காலம்

போடோகிராபர் சபாபதி எதிரில் வருகிருன்.

போ. மகாராஜா கோவிச்சிக்கக் கூடாது! படம் கொஞ்சம் கெட்டுப்போய் விட்டது, என்பேரில் தப்பில்லே-நான் வேறே பிடிக்கரேன்.

ச. அதெல்லாம் உதவாது! - என்னு ஐயா கெட்டு பூட்டுது காட்டுங்க பாக்கலாம்.

போ. (சபாபதியின் உடலும் கழுதையின் தலையுமுள்ள ஒரு படத்தைக் காட்டுகிருன்.)

ச. (அதைப் பார்த்து) என்ன ஐயா இது ?

போ. நானு அப்பவே சொன்னனுங்களே ! நீங்க கழுதையெ பத்தி நினைச்சிக்கினு இருக்கக் கூடாது இண்ணு! நீங்க நினைச்கினு இருந்தாப்போலெ இருக்குது, அப்படியே படத்திலே உழுந்துட்டுது ! (பின்புறம் கிருஷ்ணசாமி முதலியாரும் சபாபதி முதலியாரும் நகைக்கிறார்கள் மெல்ல)

ச. ஐயா போட்டோ புடிக்கரவரே ! இந்த படத்தெ யாருக்கும் காட்டாதைங்க !

---

# ஐந்தாம் அங்கம்

---

## முதல் காட்சி

இடம் — கொலு மண்டபம்.

காலம் — பகல். சபாபதி சிம்மாசனத்தில் உட்கார்ந்திருக்கிறான். கிருஷ்ணசாமி முதலியாரும் சபாபதி முதலியாரும் அருகில் இருக்கின்றனர்; பக்கத்தில் வேலையாட்கள்.

கி. மஹாராஜா அவாள், இன்றைக்கு வியாஜ்யங்கள் தீர்மானம் செய்யவேண்டிய திருக்கிறது.

ச. அப்படியே ஆவட்டும்-கூப்பிடுங்கள் ஒவ்வொன்றாய்.

கி. முதல் வியாஜ்யம்-வாதி பிரதிவாதி-விஸ்வநாதப் பிள்ளை-ராமநாதபிள்ளை

வேலையாள் அவர்களைக் கூப்பிடுகிறார்.

அவர்கள் இருவரும் வந்து நிற்கின்றனர்.

ச. என்ன ஐயா உங்க வியாஜ்யம் ?

வி. இல்லெ-மகாராஜா ! (ஆரம்பிக்கிறான்)

ச. சரி ! வியாஜ்யமில்லா போனா-சுலபமா போச்சு-ஊட்டுக்குப் போங்கள்.

வி. இல்லெ மகாராஜா ! இருக்குது மகாராஜா !

ச. ஏன் ஐயா ! ஆரம்பத்திலெயே பொய் பேசறைங்களே! முன்னெ இல்லெ இண்ணைங்க, இப்பொ இருக்குது இண்றைங்க ! - உங்களே என்னமா நம்பரது ? ஆனாலும் பரவாயில்லே சொல்லுங்க-என்ன சமாசாரம் ?

வி. என் புள்ளக்கி-இவர் பொண்ணெ கொடுக்கரேன் இண்ணு ஒப்புகினாருங்க ஒரு வருஷத்துக்கு முன்னே, இப்போ கல்யாணத்துக்கு நாள் வைச்சிகிங்க இண்ணா

ஆவட்டும்-ஆவட்டும்-இண்ணு ஒரு வர்ஷமா தள்ளிகினு வர்ராருங்க!

ச. ஏன் ஐயா அப்படி செய்யரைங்க?

ரா. இல்லேங்க-என் சொந்த மச்சான்தான் இவரு-இருந்தாலும் பொண்ணெ கேட்டா அவ்வளவு சுலபமா கொடுத்தூடலாமா? எங்க ஜாதி -வழக்கம் ரெண்டு ஜோடாவது தேய வேணுமா?

ச. ஜோடு தேயணும் இண்ரைங்களா! அவ்வளவுதானே? இந்த வியாஜ்யத்தெ சுலபமா தீர்த்து உடலாமே! ஐயா பிள்ளெ ஊட்டுக்காரரே-உங்க ஜோடு ரெண்டு தேயணுமாம் அவருக்கு-அத்தொட்டு ரெண்டு புது ஜோடா வாங்கி, அது தேயரவரைக்கும் அவரே அத்தாலே அடிங்க! தேஞ்சிபோன ஒடனே பொண்ணெ கொடுத்தூடுவாரு.

ரா. ஏ! நல்ல தீர்மானமாயிருக்குதே இது! - மகாராஜா! அப்படி ஜோடு தேய வேணும்-நாளைக்கே நாள் பார்த்து எம் பொண்ணெ கொடுத்துடரேங்க!

ச. ரொம்ப சந்தோஷம்-கல்யாணத்துக்கு என்னெ சாப்பாட்டுக்கு கூப்பிடுங்க — போங்க (அவர்கள் இருவரும் போகிறார்கள்)

கி. இரண்டாவது வியாஜ்யம்—வாதி பிரதிவாதி-கொடா கண்டன் விடாகண்டன்

வேலையாள் கொடா கண்டன்! விடா கண்டன்!

அவர்களிருவரும் வந்து எதிரில் நிற்கிறார்கள்.

ச. என்ன ஐயா, உங்க வியாஜ்யம்?

வி.க. இந்த கொடா கண்டனுக்கு ஒரு வாரத்துக்கு முன்னே பத்து ரூபாய் கொடுத்தனுங்க, அத்தெ திருப்பி கொடு இண்ணு கேட்டுகினு இருந்தா, ஆவட்டும், ஆவட்டும் இண்ணு சொல்லிகினு இருந்து, நேத்து என்னண்ணு, உன்கிட்ட நான் கொடுத்தூட்டனே இண்ராருங்க பொய்யா!

கொ. ஏய்! இந்த விடாகண்டன்தான் பொய் பேசராருங்க! நானு திருப்பிக் கொடுத்தூட்டனுங்க—சத்தியமா

ச. ஒருத்தன் கொடுத்தூட்டேண்ரா, இன்னொருத்தன் கொடுக்கலே இண்ரா, இத்தெ எப்படி தீர்மானம் பண்ரது? ஏண்டாப்பா, உங்களுக்கு யாராவது சாட்சிங்க இருக்கராங்களா?

வி.க. சாட்சி யிருந்தா இப்படி பொய் பேசுவானுங்களா இவன்? போனு போவுட்டுங்க! இவனே என் கையில் கொடுத்தூட்டேனிண்ணு ராமாயணத்தும் பேர்லே சத்தியம் பண்ணச் சொல்லுங்க-உட்டுடரேன்!

கோ. ஆம்! அப்படியே சத்தியம் பண்ணரேன்!

கி. கொண்டாப்பா-ராமாயணத்தை (வேலையாள் ராமாயணம் கொண்டுவந்து கொடுக்கிருன்)

கோ. (அதை வாங்கிக்கொண்டு) இந்தாப்பா, தலே குட்டையை வாங்கிக்க-என் தலெமேலே ராமாயணத்தெ வைச்சிகினு சத்தியம் பண்ரேன்-எனக்கென்ன பயமா? (தலை குட்டையை விடாகண்டன் கையில் கொடுத்துவிட்டு) ஐயா மகாராஜா! இந்த ராமாயணம் சாட்சியா பத்து ரூபாயே விடாகண்டன் கையிலே கொடுத்தூட்டனுங்க-சரியா போச்சி-அப்பா! இந்தாங்க ஐயா உங்க ராமாயணம்-கொடு அப்பா என் தலெ குட்டையை (அதை வாங்கித் தலையில் போட்டுக் கொள்ளுகிருன். தூரத்திலிருந்து சபாபதி முதலியார் சபாபதிக்கு தன் தலை குட்டையைத் தொட்டு சைகை செய்கிருர்)

ச. ஏய்! இங்கே வாடாப்பா-உன் பேர் என்ன? கொடா கண்டனு? நீ ரொம்ப கெட்டிக்காரன்தான்-இந்த தலே குட்டெ நண்ணு யிருக்குது, எங்கே வாங்கனே?

கோ. சேலத்துலே வாங்கனேனுங்க.

ச. இப்படி கொடு பாக்கலாம்-துணி நண்ணயிருக்குது மெலிசா (அதை வாங்கி பார்ப்பதுபோல் அவிழ்க்க அதிலிருந்து 10 ரூபாய் வெளியில் விழுகிறது) அடெ அப்பா! விடா கண்டா 10 ரூபாயையும் பொறுக்கிகினு போ ஊட்டுக்கு நீ! இனிமேலெக்கி கொடாகண்டன் இண்ணு பேர் வைச்சிகினு இருக்கரவங்களுக்கு எல்லாம், கடன் கொடுக்காதே!
அடே அப்பா! கொடா கண்டா! உம் பேரே ஏமாந்த கண்டன் இண்ணுமாத்திக்கோ-போங்க! (இருவரும் போகிருர்கள்)

---

## இரண்டாவது காட்சி

**இடம்** — அரண்மனையில் ஓர் அறை

**காலம்** — காலை, சபாபதி முதலியார் ஒருபுறம் நிற்கிருர். சபாபதிக்கு, உடம்பில் திருநீறுபூசி அதன் பேரில் 12 நாம இட்டிருக்கிறது. உருத்திராட்சம், துளசிமணி அணிந்திருக்கின்றனர். கிருஷ்ணசாமி முதலியார் சபாபதி முதுகில் "மூ" என்று எழுதுகிருர்.

ச. முதுகிலே என்ன ஐயா நாமம்?

கி. பன்னிரண்டு நாமத்திலே முக்கியமாக முதுகிலேயும், மூஞ்சிலேயும்தான் நாமம் போடவேணுங்கள்- இப்போ சரியா போச்சி! இந்த ஊர் கோவிலில் சைவ வைஷ்ணவ சண்டை அதிகம். அத்தொட்டு ராஜாவால் சைவனாக விபூதியும், வைஷ்ணவனாக நாமமும் போட்டுக் கொண்டு போனால், இரு திறத்தாருக்கும் திருப்தியாயிருக்கும்-இனி புறப்படலாம்.

---

## மூன்றாம் காட்சி

இடம் — தேவாலயம்

காலம் — காலை — பூஜாகாலம்.

சபாபதி, சபாபதி முதலியார் கிருஷ்ணசாமி முதலியாருடனும், பரிவாரங்களுடனும்வர கோயில் மரியாதையுடன் எதிர்கொண்டு அழைக்கப் படுகின்றனர்—கோபுரத்தில் நுழையும்போது

ச. அதென்ன ஐயா—என்னமோ தோரணத்திலெ கட்டி தொங்குதே?

கோயில் குருக்கள். ராஜா அவாள்—இது கந்தர்வன், ஸ்வாமி வரும் போதும் போகும்போதும் இவன் கையிலிருக்கும் பூக்குடலையிலிருந்து புஷ்பம் ஸ்வாமியின்மீது சொரியும்படி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

ச. ஆனா—எம்பேர்லெ ஏன் பூகொட்டலே—சாமிக்கு செய்யராப்போலெ, கொடெ, கிடெ ஆலவட்டம் எல்லாம் எனக்கு மரியாதெ செய்தைங்களே, இத்தெ ஏன் செய்யலெ?

கோ. கு. ராஜா அவாளுக்கல்லவா! இது ஸ்வாமிக்கிதான் செய்கிற வழக்கம்.

(கிருஷ்ணசாமி முதலியார் அவர் காதில் ஏதோ ஓத) ராஜா அவாள் தங்களுக்கும் செய்யவேண்டுமென்று உத்தரவானால் செய்யத்தடையில்லெ, ஆனால் அதில் ஏதாவது தவறினால் எங்களைக்கேட்கக்கூடாது.

ச. அப்படியே ஆவட்டும்! ஒண்ணும் தப்பாகாது! இருந்தால் நான் பாத்துக்கொள்ளறேன்.

கோ. கு. சித்தம் ராஜா அவாள்.

இடம் – (கணபதி சந்நிதியில் தீபாரதனை நடக்கிறது)

ச. ஐயா குருக்களே! இந்த சாமி கையிலே என்னமோ வைச்சிகினு இருக்கராரே அது என்ன?

கோ. கு. அது மோதகம்—கொழுக்கட்டை

ச. ஓ! இப்பொ தெரியுது! கொழுக்கட்டெ அதிகமாக சாப்பிட்டுதான் இவருக்கு தொப்பெ பெருத்துப்போயி யிருக்குதுபோலிருக்குது.

இடம் — சுப்பிரமணியர் சந்நிதியில் தீபாரதனை

ச. ஐயா குருக்களே!—இந்த சாமிக்கு என்ன ரெண்டு அம்மனுங்க இருக்குதே?

கோ. கு. இதுவா? சுப்பிரமணியர்—இவருக்கு ரெண்டுமனை விகள் தெய்வயானை, வள்ளியம்மை.

ச. (மெல்ல சபாபதி முதலியார் காதில்) ஏம்பா! அப்பொ நம்ப கூட ரெண்டு கல்யாணம் பண்ணிக்கலாம் போலெ இருக்குதே!—

இடம் — கோயில் பிராகாரம் வருகையில் தட்சிணாமூர்த்திக் கெதிரில்

ச. இது என்ன ஸ்வாமி?

கோ. கு. இவர் தட்சிணாமூர்த்தி—தட்சிணத்திலிருப்பதினால் தட்சிணாமூர்த்தி

ச. (ஒரு புறமாக சபாபதி முதலியாருக்கு) ஏம்பா! இவர் என்ன கையிலெ பொடி வைச்சிகினு இருக்கிராரு என்ன! நம்பொ எல்லாம் பொடி பொடக்கூடாதிண்ணையே அப்பா! இவர் மாத்திரம் பொடி போடலாமோ?

இடம் — மேற்குபுறம் லிங்கோத் பவருக்கெதிரில்

கோ. கு. ராஜா அவாளுக்கு—இந்த மூர்த்தி தெரியுமோ?

ச. ஏன் ஐயா! என்னை யென்ன? முட்டாள் இண்ணு பாத்திகினுங்களோ? இது மேற்கு—இங்கே இருப்ப வர் மேற்கணாமூர்த்தி—வடக்கே இருப்பவர் வடக்கணா மூர்த்தி—கிழக்கே இருப்பது கிழக்கணா மூர்த்தி—ஒசக்கே இருப்பது ஒசக்கணா மூர்த்தி!—இதெல்லாம் எனக்கு சொல்லிக்கொடுக்கத் தேவையில்லெ இனி மேலே நீங்க.

இடம் — சிவலிங்கத்தின் சன்னிதியில்.

ச. இது என்ன—மந்திரி?

ச. மு. இதுதான் சிவலிங்கம்—பெரிய ஸ்வாமி

ச. சரிதான்! இவருக்கு கல்யாணமாகலெயோ?— அம் மனெ காணமே பக்கத்திலெ?

கோ. கு. அம்மன் சந்நதி தனியாயிருக்குதுங்க — அங்கே போவோம் வாங்க.

இடம் — அம்மன் சந்நிதியில்.

கோயில் குருக்கள், தீபாரதனை செய்து குங்குமம் கொடுக்க, அதை சபாபதி விபூதி பூசிக்கொள்வதுபோல் பூசிக்கொள்கிறன்.

ச. (ஒரு புறமாக சபாபதி முதலியாருடன்) ஏம்பா! அம்மன் என்னசாமியோடெ கோவிச்சிகினு இங்கே வந்து உக்காந்துகினு இருக்குதோ?

இடம் — உள்பிராகாரத்தில் உற்சவமூர்த்திக் கெதிரில்

கோ. கு. ராஜா அவாளுக்கு—இதுதான் சோமாஸ்கந்த மூர்த்தி.

ச. அப்படி இண்ணு?

கோ. கு. உற்சவ மூர்த்தி, ஸ்வாமி—அம்மன்—நடுவில் சுப்பிரமணியர்

ச. சுப்பிரமணியரெ காணமே?

கோ. கு. இருக்கராருங்க—நடுவில்—மறைந்திருக்கிறர்.

ச. பயந்து ஒளிச்சிகினு இருக்கராரோ? ஆமாம், இன்னெரு அம்மனும் தனியா இருக்குதே?

கோ. கு. அது தனியம்மன்.

ச ஆனு சாமிக்கிகூட ரெண்டுபெண்சாதிங்க இருக்கராங்களா என்ன?

இடம் — பெருமாள் சந்நிதியில்.

தீபாரதனை நடக்கிறது

ச. மந்திரி—மந்திரி—இந்த சாமிக்குக்கூட இரண்டுபெண்சாதிங்க இருக்கராங்க!

(பட்டாச்சாரியார் தீர்த்தம் கொடுக்கிறர்)

ச. இத்தெ என்ன செய்யரது?

பட். சாப்பிடவேண்டும் (சபாபதி அப்படியே செய்கிறன். பிறகு சந்தனம் கொடுக்க அதையும் சாப்பிடுகிறன்)

ச. நாமம்போட்ட சாமி—இந்த சாமி பெயர் என்னுங்க?

பட். ரங்கநாதர்

ச. அப்படி இண்ணு?

பட். ரங்கத்திற்கு நாதர்—ரங்கம் என்றல் சபை—நாதர் என்றல் பதி

ச. சபாபதி! — என்னப்பா அது — மந்திரி — அந்த கோயில்லெ ஒரு சபாபதி இருக்கராரு! இங்கே ஒருத்தர் இருக்கிறரு! எல்லாம் ஒண்ணயிருக்குதேப்பா! இது விஷ்ணு கோயில் இண்ணயே?

**ச.மு.** ராஜா அவாள் சொல்வது மிகவும் சரி—எல்லாம் ஒன்றுதான் !

இடம் — கோயிலுக்கு வெளியில் வரும்போது

(தோரணத்தில் தொங்கவிட்டிருக்கும் கந்தர்வன் கீழ் நின்று)

**ச.** மந்திரி ! இப்பொ—இந்த கந்தர்வனெ கொட்டச் சொல்லுங்க என் தலேமேலெ (அப்படியே செய்ய சபாபதி தலேயில் மண்மாரி பொழிகிறது) அடடெ! இது என்ன ஐயா குருக்களே ! மண்ணு மழை பெய்யுதே ?

**கோ. கு.** நான் அப்பொழுதே சொன்னேனுங்களே ! தெய்வசங்கல்பம் ! ஸ்வாமிக்கு செய்யவேண்டியதை மனிஷ்யருக்கு செய்யக்கூடாது, அப்படி செய்ததால், புஷ்பங்களெல்லாம்—மண்ணாய் மாறிப்போய் விட்டன.

**ச.** நீங்கள் சொல்லுவது சரிதான்—எம்பேர்லெ தப்பு தான்—(கோபுரத்திற்குப் போகும் வழியில் தடுக்கி கீழே விழு கிறான்)

**ச.** (சபாபதி முதலியார் அவனே பிடித்தெழுப்ப) என்ன மந்திரி—கெட்ட சகுனமாயிருக்குதே ?

**ச.மு.** அப்படியில்லேங்க—"ஆலயம் விழுவது சாலவும் நன்று" என்று ஔவையார் சொல்லிருக்கிறார்கள்—இது நமஸ்காரம் பண்ணமாதிரி ஆகும்.

இடம் — ஆலேயத்திற்கு வெளியில் வந்து

**ச.** என்ன ! காட்டாமெகாரரே ! ரொம்ப வெய்யலாயிருக் குதே ?

**கி.** ராஜா அவாள் பயப்படவேண்டாம்—நானு அதற் கெல்லாம் ஏற்பாடு செய்திருக்கிறேன் — யாரடா அங்கே! ராஜா அவாளுக்குமேல் விதானம் பிடியுங் கள்—வெய்யில்படாதபடி (நான்குபெயர் ஒரு பெரிய மொத்து சவுக்கத்துணியைப்பிடிக்க, நடுவில் ஒருவன் கோலால் அதை உயரத் தூக்கிப்பிடிக்கிறான்)

**ச.** ரொம்பசரி ! காட்டாமெகாரரே, நீங்க நல்ல உக்தி காருங்க.

(கொஞ்ச தூரம் போனவுடன், குரங்கு குரங்கு ! என்று ஒரு பெரிய கூச்சல் கிளம்ப, விதானத்தைப் பிடித்திருந்தவர்கள் அப்படியே அதைவிட்டு ஓட, அந்ததுணி சபாபதியை நன்றாய் மறைத்துக்கொள் ளுகிறது, சபாபதி உள்ளிருந்து தத்தளிக்கிறான்.

# ஆரும் அங்கம்

---

## முதல் காட்சி

இடம் — அரண்மனையில் ஓர் அந்தரங்க அறை

காலம் — இரவு

சபாபதி முதலியாரும், சபாபதியும் பேசிக்கொண்டிருக்கிருர்கள்.

ச. அப்பா! இந்த ஜமீன்தார் வேலே எனக்கு வாணும்பா!

ச.மு. ஏன் சபாபதி! இப்படி அடிக்கடி சொல்லிகினு இருக்கரையே?

ச. இல்லெப்பா! தினம் எழுந்தா பெரிய கஷ்டமா போச்சி! இந்த காட்டாமெகாரரு தினம் என்னமாஞ வேலெ வைக்கிருரு.

ச.மு. இப்பொ, என்ஞவேலெ வைச்சாரு?

ச. "நீங்க இந்த ஊரு ராஜாவாச்சே! அத்தொட்டு இந்த ஊர்லெ யாராவது பெரிய மனுஷாள் வீட்டிலெ ஏதாவது விசேஷமானல் நீங்க போயி விசாரிக்கணும்---, இண்ணைக்கு இந்த ஊர் தலெயாரி வூட்லெ ஒரு அம்மா செத்துபூட்டாங்க அத்தொட்டு அவருக்கு போய் என்னமாஞ சொல்லணும், இண்ணுரு—எனக்கென்ஞப்பா தெரியும் விசாரிக்க?

ச.மு. நான் சொல்லிக்கொடுக்கிறேன் ஒன்றுக்கும் பயப்படாதே!—ஐயோ பாவம்! போன வருஷம் அவருடைய அண்ணனே தம்பியோ இறந்துபோனங்க!—இறந்துபோன அம்மா உங்களுக்கு என்ஞ ஒணும்ணு விசாரிச்சிகினு — தாயார்ராயிருந்தா, எங்களுக்கெல்லாம் வெசனமாயிருக்குது, அந்த அம்மா உங்களுக்கு மாத்திரம் தாயாரல்ல, இந்த ஊர்லெ இருக்கரவங்களுக்கெல்லாம் தாயாராயிருந்தாங்களாம், அத்தொட்டு இந்த ஊரே உங்களோடு விசனப்படுது! இண்ணு சொல்லணும் அவ்வளவுதான்.

ச. அக்கா தங்கச்சியாயிருந்தா?

ச.மு. அப்படியே மாத்திசொல்லணும்—ஊருக்கே அக்கா தங்கச்சியாயிருந்தாங்க, இண்ணு சொல்லணும் அவ்வளவுதான்

ச. அப்பொறம் இன்னெரு கஷ்டம் வைச்சாரு—பக்கத்து

தெருவிலெ, கோயில் குருக்கள் தகப்பனரு சீக்கா யிருக்கிராரும் அவரையும் விசாரிக்கணுமா நானு!

ச.மு. இதெல்லாம் கஷ்டமில்லேப்பா! போனஉடனே— உடம்பு எப்படியிருக்குது இண்ணு கேக்கணும்— உடம்பு சுமாராயிருக்குது இண்ணு சொல்லுவாரு— அப்படியே யிருக்கணும் இண்ணும் ஸ்வாமியே பிரார்த் திக்கிறேன் இண்ணு பதில் சொல்லு; அப்புறம் என்னு மருந்து சாப்பிடுரைங்க இண்ணு கேளு—அவர் என்ன மாணு பேர் சொல்லுவார், அது ரொம்ப நல்ல மருந்து அதையே சாட்பிட்டுகினு வாங்க இண்ணு பதில் சொல்லணும்—கடைசியிலே யார் வைத்தியரு இண்ணு கேளு — அவர் வயித்தியர் பேர் சொல்லுவாரு— அப்படியா ரொம்ப சந்தோஷம்—அந்த வைத்தியரெ விடாதைங்க! அவர் எல்லாம் சரிப்படுத்திவிடுவாரு— அப்புறம் உங்களுக்கு பயமேயில்லே—இண்ணு சொல்லிவிட்டு வந்துடப்பா—அவ்வளவுதான்.

ச. அப்படியே செய்யரேம்பா.

---

## இரண்டாம் காட்சி

*இடம் — வீதியில் ஓர் வீடு.*

*காலம் — பகல்.*

*தெருத்திண்ணையில் ஒருவர் விசனத்துடன் உட்கார்ந்துகொண் டிருக்கிறார். சபாபதி, சபாபதி முதலியார், கிருஷ்ணசாமி முதலி யார், பரிவாரங்களுடன் வருகிறார்கள்.*

ஒரு. வாங்க! - உக்காருங்க ராஜா அவாள்! (சபாபதி உட்காரு கிறான்)

ச. வீட்டிலே யாரோ எறந்து போனுங்களாமே—

ஒரு. ஆமாம் — நேத்து காலமே

ச. ஐயோ பாவம்! கொஞ்ச நாளைக்கு முன்னே கூட யாரோ செத்து பூட்டதாக கேள்விப்பட்டேன்—அப் போ செத்துபோனது நீங்களோ உங்க அண்ணைத் தையோ?

ஒரு. நான் தான் இருக்கரேனே! செத்துபோனது எங்க அண்ணைத்தே!

ச.மு. பாவம்! — நேத்து எறந்து போனது?

ஒரு. என் பெண்சாதி —

ச. எங்களுக்கெல்லாருக்கும் ரொம்ப விசனமாயிருக்குது!

அந்த அம்மா உங்களுக்கு மாத்திரம் பெண்சாதியா யில்லே இந்த ஊராருக்கெல்லாம் பெண்சாதியா யிருந் தாங்க!—அத்தொட்டு இந்த ஊராருக்கெல்லாம்—

ஒரு. என்னு சொன்னீங்க! நீங்க ராஜாவாயிருந்தா உங்க மட்டும் இருங்க—இதோ வர்றேன்! (உள்ளே ஓடுகிறுன்)

ச.மு. ராஜா! ராஜா! வந்தூடுங்க! வந்தூடுங்க! பக்கத்து தெருவுக்கு போவணும் (விரைந்து போகிருர்கள்)

---

## மூன்ரும் காட்சி

இடம்—பக்க விதியில் ஓர் அறை.
காலம்—பகல்.
கிழ குருக்கள் படுக்கையுடன் இருக்கிருர்
சபாபதி, சபாபதி முதலியார், கிருஷ்ணசாமி முதலியார் வருகிருர்கள்

ச. (குருக்கள் அருகில் உட்கார்ந்து) ஐயா! உடம்பு என்னமா யிருக்குதுங்க—

கு. வரணும் ராஜா! என்னமா யிருக்கும்! வர வர க்ஷீணிச்சி வருது

ச. ரொம்ப சந்தோஷம் அப்படியே இருக்கணும் இண்ணு சாமியே பிராத்திக்கிறேன்—வயித்தியர் என்னமாணு மருந்து கொடுக்கராரா?

கு. என்ன மருந்து கொடுக்கராரு—மண்ணுங்கட்டியே தான் கொடுக்கராரு!

ச. ஓ! அது நல்ல மருந்தாச்சே! அத்தையே தினம் சாப் பிட்டுகினு வாங்க!—யார் வயித்தியரு?

கு. இனிமேலெ என்னு வயித்தியரு—யமன்தான் வயித் தியன்!

ச. ரொம்ப சந்தோஷம்—அந்த வைத்தியரெ கை விடாதைங்க—அவரு எல்லாம் சரி படுத்தி வுடுவாரே—அப்புறம் உங்களுக்கு பயமே வேண்டாம்

---

## நான்காவது காட்சி

இடம்—அரண்மனையில் ஓர் அறை
சபாபதி வாடின முகத்துடன் உட்கார்ந்துக் கொண்டிருக்கிறுன்
சபாபதி முதலியார் வருகிருர்.

ச.மு. என்னு சபாபதி, ஒரு மாதிரியா யிருக்கரே?

ச. போப்பா! உன்னெ எத்தினி நாளா கேக்கரது எனக்கு இன்னொரு கல்யாணம் பண்ணிவிடச் சொல்லி.

ச.மு. உனக்கு தான் முன்னேயெ ஒரு கல்யாணம் ஆயிருக்கிதே, இன்னொரு கல்யாணம் என்னத்துக்கு இண்ணு பாக்கரேன்.

ச. சாமிங்களுக்கு மாத்திரம், கோயில்லெ, ரெண்டு ரெண்டு பொண்டாட்டிங்க இல்லேயோ? — அப்பா, நான் சொல்ரத்தெ கேளு, எனக்கு இன்னொரு கல்யாணம் பண்ணிவுடு, நானு உனக்கு இன்னொரு கல்யாணம் பண்ணி விடரேன்

ச.மு. சேச்சே! எனக்கு வேண்டாப்பா! இரண்டு பொண்டாட்டிங்களே கட்டிக்கினு எத்தினி பேரு எவ்வளவு கஷ்டப்படராங்க கேட்டதில்லெ நீ?

ச. நானு கஷ்டப்பட மாட்டெம்பா, நானு ராஜா அல்லவா? அத அல்லாமே, மச்சான் முதலியார் இந்த ஜமீனெ வாங்கனுராமே, அந்த ஜமீந்தாருக்கு கூட ரெண்டு பொண்டாட்டிங்க இருந்தாங்களாமே—அப்பா, நான் சொல்ரத்தெ கேளு, நானு நம்ப காட்டாமே காரரே, இந்த ஊர் ஜோசியரெ இட்டுகினு வரச்சொன்னே!- அந்த ஜோசியன் எனக்கு ரெண்டு கண்ணாலம் ஆவும் இண்ணு சொன்னு— அப்பவாவது, எனக்கு ரெண்டாவது கண்ணாலம் பண்ணிவைக்கரையா?

ச.மு. ஓகோ!—நீ ரொம்ப யுக்தி செய்திருக்கரே! — அப்படியே ஆவட்டும்

ச. இதோ — மந்திரி — காட்டாமெ காரு வர்ராரு பாரு — ஜோசியரெ இட்டுகினு — (கிருஷ்ணசாமி முதலியார் ஒரு ஜோசியன் வேஷம் பூண்டவனே அழைத்துக்கொண்டு வருகிறார்)

கி. நமஸ்காரம் — ராஜா அவாள்

ச. நமஸ்காரம் — யார் இவர் — ஜோசியரா?

கி. ஆமாம் — ஜோசியரெ இட்டுகினு வரணும் இண்ணு உத்தரவாச்சே.

ச. சந்தோஷம் — ஐயா ஜோசியரே! (கண்ணடித்து) என் கையெ பாத்து ஜோசியம் சொல்லுங்க — எனக்கு எத்தனி கண்ணாலம் ஆவும் இண்ணு,

ஜோ. (கை பார்த்து) ராஜா அவாளுக்கு கட்டாயமா ரெண்டு கண்ணாலம் ஆவும்.

ச. ரொம்ப சரி!—பாத்தைங்களா மந்திரி!

ச.மு. உம்—மொத்தம் எத்தனி பெண்சாதிங்க ராஜாவுக்கு பாத்து சொல்லுங்க?

ஜோ. (கைபார்த்து) மொத்தம் ஒரு பெண்சாதி தான்

ச.மு. ஏய்!—(கண்ணடித்து) ஜோசியரே—இந்த ஊர்லெ ஒரு பெண்சாதி, அந்த ஊர்லெ ஒரு பெண்சாதி இண்ணு சொல்லரங்களோ?

ஜோ. நீங்க சொல்வதும்—நான் சொல்வதும்—அல்லாம் ஒண்ணுதானுங்களே!

ச. சரி! ரொம்ப சந்தோஷம்—மந்திரி—ஜோசியருக்கு நல்ல வெகுமதி கொடுத்து அனுப்பிவிடு—அப்படியல்லா—ஜோசியரே! என் கல்யாணத்தும் போது வாங்க, நல்ல வெகுமதியா கொடுக்கரேன். ஜோசியரெ, அப்பொ—கண்ணாலத்துக்கு நல்ல நாளா ஒண்ணு பாத்து சொல்லுங்க

ஜோ. (கணக்குப் பார்ப்பதுபோல் பார்த்து) இண்ணைக்கி என்ன கிழமெ—வியாழம்—நாளநன்றைக்கு கண்ணாலத்துக்கு நல்ல நாளுங்க—உங்க ஜாதகத்திற்கு

ச. சரி நீங்க வாங்க அப்போ—(ஜோசியரும், கி. முதலியாரும் போகிறார்கள்)

ச.மு. என்ன சபாபதி! பொண்ணே காணோம். கல்யாணத்துக்கு நாள் பார்த்துவைத்துக் கொண்டாயே?

ச. இல்லெப்பா!—நீ கோவிச்சிக்காதே! நானு எல்லாம் தீர்மானம் பண்ணி வைத்திருக்கரேம்பா!—எதிர் பங்களாவிலே—ஒரு பெண் இல்லெ—செத்துப் போன இந்த ஊர் ஜமீந்தார் பொண்ணும், அவளெ கண்ணாலம் பண்ணிக்கணும் இண்ணு இஷ்டமா யிருக்குதப்பா! நம்ப நாட்டாமெ காரர் மூலமா விசாரிச்சேன்—அவளுக்கும் என்னெ கண்ணாலம் பண்ணிக்க இஷ்டம் தானும்—

ச.மு. அடாடா! ரொம்பதூரம் யுக்திபண்ணி யிருக்கரையே! அந்தமுட்டும் கெட்டிக்காரன் நீ.

ச. அப்பா! கண்ணாலத்தெ நாளெநண்ணைக்கே முடிச்சூடப்பா!

ச.மு. சரி! அப்படியே செய்யரது.

ச. அப்பா!—ஒரு சமாசாரம் மாத்திரம் மறந்துபூடாதே!

கண்ணாலத்தெ கொஞ்சம் ரகசியமா நடத்தி உடப்பா! ஆடம்பரமெல்லாம் ஒண்ணும் வேணும்

ச.மு. ஏன் ?

ச. கண்ணாலத்துக்கு தடபுடல் பண்ணு — சமாசாரம் நம்ப ஊருக்கு எட்டிபூடும் — அப்புறம் — அவளுக்கு தெரிஞ்சா — கோவிச்சிக்குவா அப்பா!

ச.மு. ஓ! — அதுவும் நீ சொல்வது சரிதான் —(போகிறார்)

---

## ஐந்தாம் காட்சி

*இடம்— அரண்மனை எதிர் விட்டில் ஓர் அறை*

*சபாபதி முதலியார், கிருஷ்ணசாமி முதலியார், கன்னி, பேசிக் கொண்டிருக்கிறார்கள்*

க. அவர் ஒண்ணும் அப்புறம் கோவிச்சிக்க மாட்டாரே?

ச.மு. அதெல்லாம் நாங்க பாத்துகிறோம், இதெல்லாம் வேடிக்கெதானே! நீ மாத்திரம் படுக்கை யறைக்குப் போகிறவரைக்கும் வாயைத் திறக்காதே — முகத்தை யும் காட்டாதே! முக்காடிட்டிகினு இரு.

கி. அதுவுமல்லாதே, அவன் இன்னொரு பெண்டாட்டி வேணுமிண்ணுகினு இருக்கிறான்! அவனுக்கு நண்ணு நீ புத்தி சொல்ல வாணுமா?

க. அத்தெ நானு பாத்துகிறேனுங்க.

---

## ஆறாம் காட்சி

*இடம் — அரண்மனையில் கல்யாண மண்டபம்*

*காலம் — பகல்.*

*நடுவில் திரை பிடித்திருக்க — கல்யாண மாப்பிள்ளைக் கோலத் துடன் சபாபதி ஒரு பக்கம் நிற்கிறான், அவன் பக்கத்தில் சபாபதி முதலியாரும் கிருஷ்ணசாமி முதலியாரும் நிற்கிறார் கள். மற்றொரு பக்கம் கன்னி கலியாணப் பெண் கோலத் துடன் முகத்தை முக்காடிட்டு நிற்கிறாள், நடுவில் புரோகிதர் நின்று கொண்டு மந்திரம் சொல்லிக்கொண்டிருக்கிறார், வாத்ய கோஷம் முழங்குகிறது.*

ச. என்ன மந்திரி!— தெரெ போட்டிருக்குதே ?

ச.மு. இது ராஜாக்கள் கல்யாணத்தின் வழக்கம்.

ச. (திரையின் பேரில் எக்கிப் பார்த்து) என்ன இது — பொண்ணுக்கு முக்காடு போட்டிருக்குதே ?

கி. ராஜஸ்திரீகளெல்லாம் — கோஷா அல்லவா ?

பு. ராஜா அவாள் மாலெ மாத்திகனும் (திரை நீக்கப்படுகிறது சபாபதியும், கன்னியும் மாலை மாத்திக்கொள்கிருர்கள் வாத்ய கோஷம் — மாப்பிள்ளையும், பெண்ணும் தீயை வலம் வருகிருர்கள்.)

---

## ஏழாம் காட்சி

இடம் — அரண்மனையில் படுக்கையறை.

காலம் — இரவு — கட்டில் சிங்காரித்திருக்கிறது.

சபாபதி, கன்னியைக் கை பிடித்து உள்ளே அழைத்து வருகிருன், வெளியில் கதவு தாளிடப்படுகிறது.

ச. (உட்கார்ந்து) ஊம் — நீயும் உக்காரேன் ? — ஏன் நிக்கரே? என்னோடெ பேச மாட்டையோ! — உம் பேர் என்ன ? —உம் மூஞ்சியெ நானு பாக்கக் கூடாதோ? என்ன எம்பேர்லெ கோவமா என்ன ?

க. (தலையை அசைக்கிருள்)

ச. என்ன கோவம் எம்பேர்லெ ? — நானு என்ன தப்பு பண்ணேன்! உம்மொகத்தெதான் கொஞ்சம் காட்டேன் — பாக்கலாம்.

க. (மாறுகுறலுடன்) நானு கேக்கர கேள்விகளுக்கெல்லாம் நெசம்மா பதில் சொன்னல் — முக்காட்டெ எடுக்கரேன்—

ச. அப்படியே ஆகட்டும் —

க. உங்களுக்கு — முன்னையெ ஒரு கண்ணாலம் ஆயிருக்குதாமே! நெஜம்தானு ?

ச. ஓ! — அதுவா! — அது என்ன கண்ணாலம்! — இப்பொ — நம்ப ரெண்டு பேருக்கும் கண்ணாலம் ஆச்சே-அந்த மாதிரி ஆவலெ —

க. பின்னெ என்னமா ஆச்சி ?

ச. சும்மா — தூங்கும்போது—தாலிகட்டிவுட்டென்—அவ்வளவு தான் —

க. தாலி கட்டனு — அவ — உங்க பொண்டாட்டியில்லையோ ?

ச. சேசே! அப்படி சொல்லக்கூடாது, அவ — என்

பொண்டாட்டி பொண்டாட்டி தான்! பொய் பேசக் கூடாது.

க. அப்பொ—என்னே யேன் கட்டிகினெங்க ?

ச. அப்படி கேளு சொல்லரேன்—அவ—நல்ல பொண்ணு தான்—ஆனு பெரிய மக்கு—புத்தியில்லாதவ—நாட்டு புறம்—நாஜூக்கில்லெ—இப்பொ நானு இந்த ஊரு ராஜா ஆய் பூட்டனு—அதுக்கோசரம் ராஜாவுக்கு தகுந்த பொண்சாதியா யிருக்கத் தேவலெயா! அதுக்கு தான் அழக்கா—புத்திசாலியா யிருக்கர உன்னெ பாத்து கண்ணாலம் பண்ணிகனேன் !

க. ரெண்டு பெண்டாட்டிங்களே கட்டிகரது நாயமா ?

ச. ஓ! ரொம்ப நாயம்—என்னெப்போலே இருக்கர—ராஜாவுங்க கட்டிக்கலாம்; முன்னெ இருந்த ராஜா வுக்கு மூணு நாலு பொண்டாட்டிங்க இருந்தாங்க ளாமே.

க. அப்பொ! எனக்கானு—அழகா யிருக்கர ஒருபொண்ணு ஆப்பிட்டா அவளே கூட கட்டிகிவைங்களோ ?

ச. சே சே! அதெல்லாம் செய்ய மாட்டேன்—

க. ஆனு—இனிமேலே வேறெ எந்த பொண்ணேயும் கட்டி கரதில்லெ இண்ணு சத்தியம் பண்ணி கொடுங்க!

ச. (அவள் கையடித்து) சத்தியமா!—இனிமேலே — கோவ மெல்லாம் பூட்டுதே யில்லெயோ ? இப்பொ சொல்லு உம்பேரென்னு ?

க. (மெல்ல) கன்னி.

ச. கன்னியா ?—எம் மொதல் பெண்சாதி பேர் கூட கன்னிதான்! உம் மூஞ்சியே காட்டு கொஞ்சம் பாக் கலாம்.

க. இதோ! (கோபத்துடன் முக்காட்டை எடுத்து விட்டு)

ச. கன்னி!—

க. என்னு சொன்னே! நானு—பெரிய மக்கு!—புத்தி யில்லாதவளா ? நாட்டுபுறமா ? எனக்கு நாஜூக்கில் லெயா!—காட்டரேன், இரு—கெட்ட கேட்டுக்கு இன் னொரு பெண்டாட்டி வேணுமா ?—என்னெ கட்டிகின ராத்திரி எனக்கு என்னு சத்தியம் பண்ணிகொடுத்தெ·

ஆணைபடிக்கு உன்னை தவிர வேறொரு பொண்ணு முகத்தையும் பாக்கரதில்லே—அப்படி பாத்தால், எடுத்துக்கோ தொடப்பக்கட்டையெ இண்ணு சொன் னையா இல்லையா ?—எங்கே தொடப்பம் ?

ச. அடி அடி! நானு இப்பொ ராஜாடி! எம்மானத்தெ கெடுக்காதெடி!

க. ஆனா—இத்தாலே பூசெ கொடுக்கரேன். (அங்கிருக்கும் செங்கோலை எடுத்துக் கொள்கிறாள்)

ச. அது—என் செங்கோலு அடி!

க. தொரப்பாக்கத்து ராஜாவுக்கு—தாத்துக்கோல் செங் கோல்! மச்சான் முதலியார் தான் சொன்னாரே! (செங் கோலின் மேல் உள்ள துணிகளைப் பிரிக்க உள்ளே தாத்துக் கோல் அகப்படுகிறது) பாத்தியா உன் செங்கோலெ!

ச. அது யார் சொன்னது ?

க. யாரா ? உங்க நாட்டாமெகாரு!—கிருஷ்ணசாமி முத லியாரு!

ச. ஓ! அப்பவே நானு நெனச்சேன்! கன்னி!—இது— நானு மாடு ஓட்டர கொம்பாச்சே!

க. மக்கு ராஜாவுக்கு—மாட்டுகோல் செங்கோலு! இப் பொ என்னா சொல்லரே ?

ச. கன்னி!—கன்னி! நீ என்னெ நண்ணா அத்தாலே அடி! அப்பொ தான் எனக்கு நல்ல புத்தி வரும்— அப்பறம் நான் சொல்ரத்தெ மாத்திரம் கேளு—

க. அப்புறம் என்னா ?—இப்பொவே சொல்லு அத்தே.

ச. எனக்கு ஒரு ஓசனெ தோணுது—எசமான் மொதலி யாரு—அதாம்—அப்பாவும்—இந்த மச்சான் மொதலி யாரும் சேர்ந்து தான் இந்த யுக்தி யெல்லாம் பண்ணி யிருக்கணும் மொதலெப்புடிச்சி—அப்பவே நீ சொன்னெ! உம்பேச்செ கேக்காமெ போனே!— எம்பேர்லெ தப்புதான்—நானு தப்பு போட்டுகிறேன் (தவடையில் போட்டுக் கொண்டு), கன்னி, நீ என்னமோ புத்திசாலி, எனக்கு என்னமோ இந்த ஜமீன்தார் வேலெ வேணும்!—இதிலே யிருந்து தப்பிச்சிக்க ஒரு வழி சொல்லு பாக்கலாம்,

க. எனக்கென்னு தோணுதிண்ணு—நாளேக்கி இந்த ஊராரை யெல்லாம் கூப்பிட்டு அனுப்பிச்சி—"நானு ஜமீன்தாரல்லா! இந்த ஊர் ஜமீந்தார் கிருஷ்ணசாமி மொதலியாரு—அவருக்கு பட்டங் கட்டி விடுங்க, அவர் உத்தரவும் பேர்லெ, நானு ஜமீந்தார் வேஷம் போட்டுகினு, இத்தனி நாளு—இந்த, ஹோலி பண்டிகைக் காவ, வேடிக்கைபண்ணேன்!"-இண்ணு சொல்லிவிடு.

ச. ஆமாண்டி கன்னி!—அது தான் நல்ல யுக்தி, அப்படியே செய்யரேன்-என்னுண்ணுலும் அப்பாமொதலியாரு சொல்ரபடி பொம்மனுட்டிங்களுக்கு தான் புத்தி அதிகம்!

நாடகம் முற்றிற்று.